முத்துசாமிப் பிள்ளை, அ.

**425.** i. ஏலாக்குரிச்சி திருக்காவலூர் அர்ச். அடைக்கலநாயகித் திருஸ்தலத்தின் ஆரம்ப வரலாறும், வீரமாமுனிவர் சரித்திரமும் ; ii. அர்ச் சூசையப்பர் கைத்தொழிற்சாலை அச்சாபீஸ், திருச்சிராப்பள்ளி ; iii. *1933* ; iv. உ.ப. *48* ; v. *19 × 12* செ.மீ. ; vi. *0—2—0* ; vii....... ; viii. *1199/1933/*II.

**Q6:3**

மெயின் சென்ஸ் சுவாமி

**426.** i. *துறவற அநுசாரங்களின் சங்க்ஷேபம்—(முதற் பதிப்பு)* ii. ரெவரண்ட் எம். எம். பொன்னுசாமி, திருச்சிராப்பள்ளி ; செயிண்ட் ஜோஸப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. *1932* ; iv. உ.ப. *336* ; v. *18 × 12* செ.மீ. : vi. ........ ; vii. இது கிறித்துவர் துறவியாதல் பற்றிய நூலாகும். இதில் நவசந்தியாசத்தின் கதியும், அதை அடையப் பொது வழியும் கூறப்பட்டுள்ளது. உத்தம தனம், உத்தம தனத்துக்கு விரோதமான விக்குனங்கள், உத்தம தனத்தை அடைவதற்கு வழிகள், பக்தி முயற்சிகளை நன்றாய்ச் செய்யும் வழி, அநுதின வேலைகளை அர்ச்சித்தல், சந்நியாசி பிறருடன் பழக வேண்டிய விதம், விசேஷ பத்தி முயற்சிகள் ஆகியனவும் அடங்கியுள்ளன. viii. *707/1932/*IV.

**Q6:3**

**427.** i. *துறவற அநுசாரங்களின் சங்க்ஷேபம் (2-ம் பதிப்பு)* ; ii. எப். எம். பொன்னுசாமி, திருச்சிராப்பள்ளி ; செயிண்ட் ஜோசப் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. *1935* ; iv. உ.ப. *360+7*; v. *18 × 12* செ.மீ. ; vi. ...... ; vii ........ ; viii. *1297/1935/*II.

**Q6:3**

**239 கிறித்துமார்க்க அத்தாட்சி**

அமிர்தம், எ. சங்.

**428.** i *நானும் சர்வேஸ்வரனின் குரு ஆவேன்* ; ii. சார்ல்ஸ் பிஷப் ஆப் மயிலாப்பூர், சென்னை ; கௌரி பிரஸ், சென்னை ; iii. *1934* ; iv. உ.ப. *61* ; v. *18 × 12* செ.மீ. ; vi. *0—2—0* ; vii. சங். வில்லியம் டாயில் சுவாமிகள் இயற்றிய நானும் குருவாகலாமா ? எனும் ஆங்கில நூலைத் தழுவி, தமிழில் எழுதப்பெற்ற நூலாகும். இதன்கண் குருத்துவம், குருவின் மகிமை, குருவானவரின் ஆத்ம இரட்சண்யம், குருவாக வேண்டியவர்களின் கடமைகள் முதலியன விளக்கப்பட்டிருக்கின்றன, viii. *559/1934/*II.

**Q6:3**

**429.** i. ஆரம்ப வேத சரித்திரம் ; ii. மிஸ்ஸௌரி இவான் சவிகன் லூதரின் இந்தியா மிஷன் ; எம். இ. எல். ஐ. எம். பிரஸ், வாணியம்பாடி ; iii. *1932* ; iv. உ.ப. *211* ; v. *24* ×*15* செ. மீ. ; vi......... ; vii. இந் நூலின் ஒரு பக்க அளவில் விவிலியப் பகுதிகளைத் தந்து அதனை விளக்கும் வகையில் வண்ணப் படங்களை எதிர்ப் பக்கத்தில் அச்சிட்டுள்ளனர். இந்நூலின் முதற் பகுதியில் பூர்வகாடு சரித்திரமும், இரண்டாம் பகுதியில் கோத்திரப் பிதாக்களின் வரலாறும், மூன்றும் பகுதியில் மோசேயின் வரலாறும், மற்றைய நான்கு பகுதிகளில் கி.மு. *1460* முதல் கி.மு. *588* வரை நடந்த முக்கிய நிகழ்ச்சிகளும், அடுத்தப் பிரிவில் இயேசுவின் வரலாறும் விளக்கப்பட்டுள. viii. *851/1932*/IV.

Q*6:3*

**சவுரிராயன் ஏசுதாசன், எப்.. ஆர். சி. எஸ்.**

**430** i. தெய்வ பக்தியும், தேசபக்தியும் ; ii. விக்டோரியா அச்சியந்திர சாலை, திருப்பத்தூர் ; iii. *1931* ; iv. உ.ப. *65* ; v. *18* ×*12* செ.மீ. ; vi. *0—1—6* ; vii. இது கிறித்துவ சமயக் கொள்கைகளை விளக்குகிறது. கிறித்துவர்கட்கும் அரசியலுக்கும் உள்ள தொடர்பு பற்றியும் பிறபற்றியும் ஆராய்கிறது. viii. *313/1931*/III.

Q*6:3*

**சாலஸ் ஹடன் ஸபர்ஜன்**

**31** i. போதக தீபிகை (முதல் பாகம் 3-ம் பதிப்பு) ; ii. தி கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி பார் இந்தியா, மதருஸ் ; டயோசிசன் பிரஸ், சென்னை ; iii. *1935* ; iv. உ.ப. *59* ; v. *18* ×*12* செ.மீ. ; vi. *0—4—0* ; vii. இந் நூலில் இலண்டன் மாநகரில், போதகர் கல்லூரியில் சால்ஸ்ஹடன் ஸபர்ஜன் என்பவர் தம் மாணுக்கர்க்கு ஆற்றிய சொற்பொழிவுகளின் தமிழாக்கம் அடங்கியுள்ளது. இது கிறித்துவ போதக ஆசிரியர்க்கு மிகவும் பயனுடைத்தாகும். இதன்கண் போதக ஆசிரியர்களின் தன்மை, நோக்கம், முதலிய செய்திகள் விரிவாக விளக்கப் பட்டிருக்கின்றன. viii. *1168/1938*/I.

Q*6:3*

**432.** i. தற்பர நிருபணம் ; ii. செயிண்ட் ஜோசசங்கத்தார், ஜாப்னு, இலங்கை ; செயிண்ட் ஜோசப்ஸ் இண்ட்ஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. *1934* ; iv. செ.மு.எ. *100* ; v. *18* ×*12* செ.மீ. : vi.........; vii. இறைவன் இல்லையென மறுப்பார்க்கு மறுப்பாக இந் நூல் அமைந்துள்ளது ; இதன்கண் *100* கண்ணிகள் அமைந்துள்ளன. இடையிடையே கிறித்துவ வேதாந்தக் கருத்துக்கள் புகுத்தப் பெற்றுள்ளன. viii. *490/1935*/I.

Q*6:3*

பாலசுந்தரம் சந்நியாசி, ஆர்.

433. i. சமுசயக் கயரறுக்கிற ஞானத் திறவுகோல (2 ம பதிப்பு) ; ii. இமானுவேல் பிரஸ், மேட்டுப்பாளையம் ; iii. *1932* ; iv. உ.ப. *163* ; v. *18 × 12* செ.மீ. ; vi. *1—6—0* ; vii. இது கிறித்து பற்றியும், கிறித்துவ சமயம் பற்றியும் கூறும் நூல். ஆசிரியர் மாணவர் வினு விடையாக அமைந்தது. viii. *209/1932/*II.

Q*6:3*

434. i. பிரசங்க குறிப்புகள் ; ii. எஸ். சி. நெயில், எம். ஏ., நாசரெத் ; சத்யா பிரிண்டிங் பிரஸ், நாசரெத் ; iii. *1930* ; iv. உ.ப. *13* ; v. *21 × 14* செ.மீ. ; vi........ ; vii. இதில் திருச்சபையின் வருஷம், பழைய ஏற்பாட்டுச் சரித்திரங்கள், நமது ஆண்டவருடைய உவமைகள், கர்த்தருடைய ஜெபம் ஆகிய தலைப்புகள் விளக்கப்பெற்று உள்ளன. viii. *216/1932/*I.

Q*6:3*

மேரி வேதநாயகம்

435. i. பாக்கியவான்கள் யார் ; ii. ஆனந்தா பிரிண்டிங் ஓர்க்ஸ், திருவள்ளூர் ; iii. *1930* ; iv. உ.ப. *282* ; v. *21 × 13* செ.மீ. ; vi. *1—4—0* ; vii. நூறு அத்தியாயங்கள் அடங்கியுள்ளன. இது, 'ஏசுநாதரிடம் நம்பிக்கை வைப்பவன்' என்பது போன்ற தலைப்புகளில் கிறித்துவ சமயக் கொள்கைகளை விளக்குவது viii. *1646/1931/*I.

Q*6:3*

ஜீன் மெஸ்லியர் பாதிரியார்

436. i. பகுத்தறிவு (அல்லது) கத்தோலிக்க குருவின் மரண சாஸனம் ; ii. பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், ஈரோடு ; iii. *1935* ; iv. உ.ப. *84* ; v. *18 × 12* செ.மீ. ; vi. *0—4—0* ; vii. ஜீன் மெஸ்லியர் எனும் கத்தோலிக்க பாதிரியார் தாம் கொண்ட கருத்துக்களைத் தமது மரண சாசனமாகப் பிரஞ்சு மொழியில் எழுதினுர். இதனை ஆங்கில மொழியில் மிஸ் ஆனு நூப் எனும் பெண்மணியார் மொழிபெயர்த்தார். ஆங்கில மொழி பெயர்ப்பின் துணை கொண்டு குருசாமி என்பவர் தமிழில் எளிய நடையில் மொழி பெயர்த்துத் தந்துள்ளார். இதன்கண், கடவுள், மதம், சடங்குகள், போன்றவை எல்லாம் வெறும் கற்பனை என்றும் பலத்தின் காரணமாகத் தோன்றியவை

என்றும், குருமார் ஏழைப் பாமர மக்களை ஏய்த்துப் பிழைக்கின்றனர் என்றும் தக்க ஆதாரங்களுடன் விளக்குகிறார். இது ஒரு பகுத்தறிவு ஆய்வுக் கட்டுரையாகும். viii. *108/1935*/II.

**Q6:3**

ஹில்ஸ் குரு, ஏ. எம்.

***437.*** i. பரிசுத்தமும் வல்லமையும் ; ii. தி கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி பார் இந்தியா, சென்னை ; டயோசிசன் பிரஸ், சென்னை ; iii. *1935* : iv. உ.ப. *87* ; v. *18* × *12* செ.மீ. ; vi. *0—4—0* : vii ஆங்கிலத்தில் வெளியிடப்பெற்ற நூலின் தமிழாக்கம் இது. ஆத்மாக்களை ஆசீர்வதிப்பதற்கும், ஆதாயப்படுத்துவதற்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கம் செய்வதற்கும், குருமார்களுக்கு இந் நூல் பெரிதும் பயனுடையதாகும் viii *677/1935*/IV.

**Q6.3**

## 241 கிறித்துவ ஒழுக்க நெறிகள்

***438.*** i. பொன் தூள் ; ii. சாது தாமஸ் இரத்தினம் ; முருகவிலாசம் பிரஸ், தூத்துக்குடி ; iii. *1934* ; iv. உ.ப. *68* ; v. *12* × *9* செ.மீ. ; vi. *0-3-0* ; vii. இச்சிறு நூலில் அன்றாட வாழ்க்கைக்கு நல்வழியைக் காட்டும் *48* அறவுரைகள் பல்வேறு தலைப்புகளில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன ; viii. *908/1935*/I.

**Q6:3**

## 242 வழிபாடு

***439.*** i. அநுதின பூசை ; ii. செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. *1931* ; iv. உ.ப. *67* ; v. *10* × *6* செ.மீ. ; vi. . . . . ; vii. இதில் கிறித்துவர் நாளும் செய்ய வேண்டிய பூசை கொடுக்கப்பட்டுள்ளது. பூசை செய்ய வேண்டிய முறையும், பிறவும் கொடுக்கப்பட்டுள. viii. *1031/1931*/IV.

**Q6:412**

அபெத் எசெக்கியல்

***440.*** i. கிறிஸ்துநாம சங்கீர்த்தனை ; ii. நித்யானந்தா பிரஸ், துறையூர் ; iii. *1930* ; iv. செ.மூ.ப. *36* ; v. *16* × *10* செ.மீ. ; vi. *0-2-0* : vii. இதில் அன்னமங்கலம் கிறிஸ்து சங்கீத சபா பஜனைக்கெனத் தயாரிக்கப்பட்ட பாடல்கள் அடங்கியுள்ளன. இவை இராக தாளங்களுடன் அமைக்கப் பெற்றுள்ளன. viii. *639/1831*/I.

**Q6:412**

441\. i. அர்ச் அந்தோனியாரை நோக்கித் தாழ்ச்சியுடன் செய்யும் ஜெபம் ; ii. .......... ; மெர்க்குரி பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை ; iii. *1935* ; iv. உ.ப. *32* ; v. *13* × *10* செ.மீ. ; vi. .......... vii. அந்தோனியாரைக் குறித்துச் செய்யப்படும் செபங்களும், பிரார்த்தனைகளும் கொண்ட நூல். viii. *1336/1935/*I.

Q6:412

அல்போன்சோ மெசியா,

442\. i. மகா சுக்கிரவாரம் (நான்காம் பதிப்பு) ; ii. அர்ச்சூசையப்பர் தொழிற்சாலை அச்சுக்கூடம், திருச்சிராப்பள்ளி : iii. *1931* ; iv. உ.ப. *77* ; v. *16* × *10* செ.மீ ; vi. .......... ; vii பெரிய வெள்ளிக் கிழமையன்று இயேசுநாதர் சிலுவையில் அடைந்த மரணவேதனையின் பேரில் செய்யப்படும் வழிபாடாகும் முதலில் எஸ்பாஞ்ஞை மொழியில் எழுதப்பட்டுப் பின்னர் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு, தமிழாக்கம் செய்யப்பட்டது. viii. *917/1931/*II.

Q6:412

443\. i. எ புக் ஆப் பிரேயர் பார் விமென் ; ii. செயலாளர், திருநெல்வேலி டயோசிசன் மதர்ஸ் யூனியன் ; தி ஹிலால் பிரஸ், திருநெல்வேலி ; iii. *1935* ; iv உ.ப. *24* ; v *18* × *12* செ மீ ; vi. . . . . . . . ; vii இதன்கண் பெண்கள் காலந்தோறும் செய்யக்கூடிய செபங்கள் உரைநடையில் அமைந்துள்ளன. viii. *182/1935/*II.

Q6:412

444\. i. குருத்தோலை ஞாயறு ; ii. நாடார் பிரஸ், லிமிடெட், சிவகாசி ; iii. *1932* ; iv. செ.மூ.ப. *12* ; v. *21* × *14* செ.மீ. ; vi. .... ; vii. பெரிய வெள்ளிக்கிழமை ஈஸ்டர், குருத்தோலை ஞாயிறு ஆகிய புண்ணிய நாட்களின்போது பாடப்பட வேண்டிய தோத்திரப் பாடல்கள் அடங்கியுள்ளன. viii. *1522/1932/*I.

Q6; 412

சாமுவேல் ஐயர், ஞா

445\. i. ஒரு சந்தி நாள் (தியானப் புத்தகம் மூன்றும் பதிப்பு) ; ii. இவான்சலின் லூதரின் மிஷன் பப்ளிஷிங் ஹவுஸ், டிரங்குபார், பி.என். பிரஸ், சென்னை ; iii. *1931* ; iv. உ.ப. *164* ; v. *18* × *12* செ.மீ. ;

vi. *0-9-0* ; vii. இது ஒரு சந்தியின் முதல் நாளாகிய புதன் கிழமை தொடங்கி 40-ஆம் நாளாகிய சனிக்கிழமை ஈறுகச் செய்யப்பட வேண்டிய தியானங்களின் தொகுதியாகும். viii. *910/1931/*II.

Q6:412

446. i. ஒரு சந்தி நாள் (தியானப் புத்தகம்—3-ம் பதிப்பு) ; ii. இவான்சலின் லூதரின் மிஷன் பப்ளிஷிங் ஹவுஸ், டிராங்குபார், பி.என். பிரஸ், சென்னை ; iii. *1931*; iv. உ.ப. *164* ; v. *18 × 12* செ.மீ. ; vi. *0-9-0* ; vii. ...... ; viii. *910/1931/*II.

Q6:412

447. i. ஞான முயற்சிகள் ; ii. ரெவரண்ட் எப். எம் பொன்னுசாமி, திருச்சிராப்பள்ளி ; செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. *1932* ; iv. உ.ப. *271* ; v. *17 × 11* செ.மீ.; vi. .............. ; vii. இது கிறித்துவ சமயக் கொள்கைகளை விளக்கும் நூல். நான்கு வாரங்களிலும் செய்யப்பட வேண்டிய தியானம் முதலியனவும் கிறித்துவின் வாழ்க்கைக் குறிப்புகளும் அடங்கியுள. viii. *731,1932,*II.

Q62:412

448. i. தபசுநாள் தியானம் ; ii. கிறிஸ்துநாதர் பக்தி சமாஜம், முருக விலாஸ் ஜனனுகூல பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. *1931* ; iv. உ.ப. *68* ; v. *18 × 12* செ.மீ. ; vi. .............. ; vii. இதில், ஆராய்ச்சி, அனுபவம், அன்பு, அந்தகரண சுத்தி, அந்நியோன்னியம், அறநெறி சேவை முதலிய ஆறு அதிகாரங்கள் உள. இறுதியில் அனுபந்தமாகத் தோத்திரம் முதலியன சேர்க்கப்பட்டுள்ளன. viii. *93/1931/*II.

Q6:412

புருஞேவேர்க்குரிஸ், சங்.

449. புதுத்தியானங்கள் (முதல் புத்தகம்-இரண்டாம் பதிப்பு) ; ii. ரெவ. பிரதர் ஜோசப் திருச்சிராப்பள்ளி, செயின்ட் ஜோசப்ஸ் இன்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. *1931* ; iv. உ.ப. *869* ; v. *19×14* செ.மீ. ; vi. .............. ; vii. இது துறவியர்க்காக எழுதப்பட்ட தியான நூலாகும். இதில் பன்னிரு திங்களிலும் ஒவ்வொரு நாளும் செய்யப்பட வேண்டிய தியானங்கள் தனித்தனியே சொல்லப்பட்டுள்ளன. viii. *936/1931/*III.

Q6:412

வேதநாயகம் ஐயர், ஜார்ஜ், எஸ். சங்கை:

450. i. பரலோக ராஜ்ஜியப் பாமாலை (திருத்திய புதுப் பதிப்பு); ii. அதிஷ்டம் ஐயர் சங்கை ஜார்ஜ், உசிலம் பட்டி ; iii. 1931 ; iv. செ.மூ.ப. 99 ; v. 18 × 12 செ. மீ. ; vi. 0-6-0 ; vii. இந்நூலில் இயேசுநாதரின் உவமைகள் இனிய பாடலாகப் பாடப்பட்டுள்ளன. இந்நூலின் இறுதியில் பல நல்ல கீர்த்தனைகளும், இராக விளக்கங்களுடன் எசேக்கியல் பாகவதரால் தயாரிக்கப்பட்டு இணைக்கப் பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலின் இறுதியில் வேத வசனங்களையும், உவமைகளையும் கொடுத்திருப்பது மாணவர்கள் புரிந்துகொள்ள ஏதுவாக உள்ளது. viii. 1098/1931/II.

Q6;412

ஜேசுதாசன், ஜே. ஏ.

451. i. பரி. நற்கருணை ஆயத்ததியானம் ; ii. ஸ்ரீ ராம கிருஷ்ணு பிரஸ், அம்பாசமுத்திரம் ; iii. 1934 ; iv. செ.மூ.ப. 36 ; v. 18 × 12 செ.மீ. ; vi. ......; vii. கிறித்துவச் சமயத்தார் செய்யும் நற்கருணைத் தியான வசனங்களும், பாடல்களும் தொகுத்து இந் நூலில் தரப்பட்டுள்ளன. viii. 800/1934/III.

Q6:412

## 242·2 நாள் வழிபாடு.

அகஸ்டியஸ்.

452. i. சேசுவின் சிறிய இருதய பொக்கிஷம் ; ii. செயின்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ். திருச்சிராப்பள்ளி; iii. 1934; iv. உ.ப. 66 + 2 ; v. 12×18 செ.மீ. ; vi. ....... ; vii. இச்சிறிய நூலில் யேசுநாதரிடம் செய்யப்பட வேண்டிய முறையீடும், சொல்லப்பட வேண்டிய செபங்களும், செபம் செய்யும் போது கடைப்பிடித்தொழுகப்பட வேண்டியவையும் விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 143/1934/II.

Q6:412

453. i. ஆராதனை ஒழுங்குகள் ; ii. கார்ப்ரன்ஸ்ஹால், மதுரை ; iii. 1933 ; iv. உ.ப. + செ.மு. ப. 28 ; v. 21 × 14 செ.மீ. ; vi. ....... ; vii. இதில் கிறித்துவா் ஆராதனையின் ஒழுங்குகள் கொடுக்கப்பட் டுளளன. viii. 955/1933/I.

Q6:412

454. i. கிறிஸ்தவ ஆராதனைகள் ; ii. விக்டோரியா ஜுப்ளி பிரஸ், சித்தூர் ; iii. 1933 ; iv. உ.ப. + செ.மு.ப. 23 ; v. 21 × 14 செ.மீ. ; vi. ........ vii. இதில் கிறித்துவர் செய்யும் 11 ஆராதனைகள் அடங்கியுள. viii. 73/1933/I.

Q6:4122

## 252 சொற்பொழிவு.

பரமானந்தம், எஸ்.

455. i நூறு பிரசங்கங்கள் ; ii. . . . . ; சேக ஆர் பிரஸ், சென்னை ; iii. 1931: iv. உ. ப. 366 ; v. 21 × 14 செ. மீ.; vi. 1-8-0; vii. மக்கள் இறைவனை நெருங்கவும், இயேசுவை வழிகாட்டியாக ஏற்றுகொள்ளவும், வாழ்க்கையில் ஏற்படும் பலவித சிக்கல்களைச் சமாளிக்கவும் ஆசிரியர் வழிவகைகளை வகுத்துத் தந்துள்ளார் viii. 1270/1932/I.

Q6:52

ஸ்பர்ஜன் ஐயர்.

456. i. ஸ்பர்ஜன் ஐயர் இயற்றிய பிரசங்கங்கள் (திரட்டு 1); ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி பார் இந்தியா, சென்னை; டயோசிசன் பிரஸ், சென்னை; iii 1934; iv. உ, ப. 63; v. 18 × 12 செ. மீ vi. 0-4-0; vii. இந்நூலில் திரு. சால்ஸ் ஹடன் ஸ்பர்ஜன் ஐயரவர்கள் ஆற்றிய 10 சொற்பொழிவுகள் அடங்கியுள்ளன. viii. 604/1934/III.

Q6:52

457. i. ஸ்பர்ஜன் ஐயர் இயற்றிய பிரசங்கங்கள் (திரட்டு 2); ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி பார் இந்தியா, மதருஸ்: டயோசிசன் பிரஸ், சென்னை ; iii. 1934 ; iv. உ. ப. 32; v. 18 × 12 செ. மீ ; vi. 0-4-0; vii. இந் நூலில் ஸ்பர்ஜன் ஐயர் அவர்கள் ஆற்றிய 10 சொற்பொழிவுகள் தமிழில் மொழி பெயர்த்துத் தரப்பட்டுள்ளன. viii 813/1934/IV

Q6:52

## 264·1 கூட்டு வழிபாடு.

458. i. அக்கேஷனல் சாங்ஸ் ; ii. தி கிரைஸ்டு சர்ச் ராம்நாட்; எஸ். எம். பிரஸ், பரமக்குடி ; iii 1931 ; iv. செ. மு ப. 64 v. 18 × 1 செ.மீ. ; v. ........ ;

vii. இது, கிறிஸ்துமஸ் பாட்டுகள், ராஸ்தர் பண்டிகைப் பாட்டுகள், அறுப்பின் பண்டிகைப் பாட்டுகள், ஜெபக் கூட்டப் பாட்டுகள் ஆகியவை கொண்ட நூல். viii. 224/1931/III

Q6:4146

அந்திருஸ் அத்தியக்ஷர்

459 i. ஜெபத்தியானக் கொத்து; ii. தி சர்ச்புக் ரூம்' பெஜவாடா, டயோசிசன் பிரஸ்' மதருஸ்; iii. 1934; iv. செ.மூ;ப. 157; v. 18×12செ. மீ.; v'. ........: vi. இந்நூலில் பிஷப் அந்திருஸ் செய்த தனித் தியானங்களை தழுவி எழுதப்பெற்ற பல வகையான தியானங்களும், செபங்களும், தோத்திரப் பாக்களும் அடங்கியுள்ளன, இதனை வி. எஸ். அஸாரியா என்பவர் மொழி பெயர்த்து உள்ளார். viii. 279/1934/II.

Q6:4146

460 i. ஆசிரம ஜெபமாலை ii. கிறிஸ்துகுல ஆசிரம பிரசுரம், திருப்பத்தூர், வடஆற்காடு ஜில்லா; விக்டோரியா அச்சுக்கூடம், திருப்பத்தூர், iii. 1933; iv. உ. ப. + செ.மூ.ப. 119; v. 16×10 செ.மீ.; vi. ........; vii. இந்நூலில் கிறித்துவர் தாங்கள் செய்யும் ஆராதனையின்போதும் செபம் புரியும் போதும் பாடவேண்டிய பாடல்களும், சொல்லவேண்டிய வசனங்களும் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இவை வேத வாக்கியங்களின் துணைகொண்டு இந்திய முறைப்படி இயற்றப்பட்டுள்ளன. viii. 410/1934/I.

Q6:4146

சாமுவேல் ஐயர், ஜே. ஏ. (தொ. சு.)

461 i. கைப்பிரதிப்பாட்டுகள் : ii. நாடார் பிரஸ் லிமிடெட், சிவகாசி; iii. 1932; iv. செ. மூ. எ. 250; v. 17×11 செ. மீ.; vi. 0—6—0; vii. இதில் பல கிறித்து வரலாற்றுப் பாக்களும், தோத்திரப் பாடல்களும் அடங்கியுள்ளன. கிறித்துவின் பிறப்பு, பவனி, பாடு, மரணம், உயிர்த்தெழுதல், பரமேறல், இரண்டாம்வருகை, நியாயத் தீர்ப்பு, மோட்சம், சுவிசேஷ பிரபல்யம், விவாகம், புதுவருஷம் முதலியவை பற்றிய பாடல்களின் தொகுதி இது. viii. 567 1932 IV.

Q6:4146

சாமுவேல் ஐயர், சங்

462. i. தூப கலசம் (3-ம் பதிப்பு) ; ii. ஜெகம் அண்டு கம்பெனி ; டார்சன் பிரஸ், திருச்சிராப்பள்ளி : iii. 1934 : iv. உ.ப. 120 : v. 14×10 செ. மீ. : vi. ............... : vii. இந்நூலில் இயேசு பெருமானை வழிபடுவோர் காலை மாலைக் காலங்களில் வாசிக்கத்தக்க பாடல்களும் ஐந்து வாரக் காலங்களிலும் சொல்லவேண்டிய ஜெபங்களும், பண்டிகை நாட்களில் பயன்படுத்த வேண்டிய ஜெபங்களும், சடங்குகள் போன்றவைகள் நிகழ்த்துங்கால் அனுசரிக்க வேண்டிய முறைகளும் கூறப்பட்டுள்ளன. viii. 437/1935/I.

Q6:4146

தங்கம்மாள், வி., தூத்துக்குடி

463. i. பக்திரச பாமாலை (முதற் பதிப்பு). ii. முருகவிலாசம் அச்சுக்கூடம், தூத்துக்குடி ; iii. 1934 ; iv. செ. மூ. ப. 18 ; v. 6×10 செ. மீ. vi. .............. ; vii. இதில் இயேசுபெருமானின் மீது புனையப்பெற்ற பல்வேறு மெட்டுகளில் அமைந்த இசைப் பாக்கள் அடங்கியுள்ளன. viii. 868/1934/II.

Q6:4146

464. i. திருமணி ஆராதனை ; ii. அகஸ்தினஸ், எஸ். ஜெ., திருச்சிராப்பள்ளி ; செயின்ட் தெரசா பிரிண்டிங் ஒர்க்ஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1933 ; iv. உ. ப. 134 ; v. 12×9 செ. மீ.. vi. ........ ; vii. இந்நூலில் இயேசு நாதரைக் குறித்து ஆராதனை செய்யும் காலங்களில் சொல்ல வேண்டிய செபங்கள் அடங்கியுள்ளன. viii. 1070/1933/III.

Q6:4146

தேவதாசர்

465. i. கைப்பிரதி பாட்டுகள் (2-ம் பதிப்பு) ; ii. நாடார் பிரஸ் லிமிடெட் சிவகாசி ; iii. 1933 ; iv. செ. மூ ப. 198 ; v. 17 ×11 செ. மீ. vi. 0-6-0 ; vii. இயேசுநாதரின் பெருமைகளை விளக்கும் வகையில் இயற்றப்பட்ட பாடல்களைக் கொண்டது. வழிப்பாடுகள் நிகழ்த்தும் போது பாடற்குரியது. viii. 1233/1933/I.

Q6:4146

466. i. பரம நற்கருணைப் பாலிய நண்பர் ii. ; செயின்ட் ஜோசப்ஸ் இன்டஸ்ட்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சினுப்பள்ளி ; iii 1931 ; iv. உ. ப. 194 ; v. 12×8 செ. மீ. ; iv. . . . . . . . . ; vii. இது தார்சீஸ் சபையோரின் உபயோகத்திற்கென ஏற்பட்டுள்ளது. ஆண்டின் 12 திங்களும் உபயோகமான மன்ருட்டுகள், பிரார்த்தனைகள் முதலியவையடங்கியது. இறுதியில் அநுபந்தமும் பென்சமீனர் பிரவேசச் சடங்கும் திரு இருதயப் பால்யர் சபை ஒழுங்குகளும் அடங்கியுள்ளன. viii. 264/1931/III.

Q6:4146

பொன்னுசாமி பெர்னண்டோ, காயல்

467. i. பரிசுத்த ஜெபமாலை மாதாமீது "தோத்திரப் பா" ; ii அர்ச் சூசையப்பர் பக்த பஜனைக் கோஷ்டி ; எஸ். பி.பிரஸ் ; iii 1931 ; iv. செ. மூ. எ. 9 ; v. 17×11 ; செ. மீ. ; vi. . . . . . . ; vii. இந்நூலில் வன்னையம்பதியில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் பரிசுத்த ஜெபமாலை மாதா மீது புனையப் பெற்ற தோத்திரப் பாக்கள் அடங்கியுள்ளன. பல்வேறு மெட்டுகளில் அமைந்த 9–பாக்கள் காணப்படுகின்றன. viii. 50/1931/III.

Q6:4146

மரிய இரோன்மணி பாவலன், அ. சி. யா.

468. i. அகிலதியாணி ; ii. ஜெகதாம்பாள் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1930 ; iv. செ. மூ. ப. 20 ; v. 21×14 செ .மீ. ; vi. 0–4–0 ; vii. இது மதுரை வியாகுல மாதா திருவிழாவின் போது நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் கண்டு களித்துப் பாடிய பாடல்களைக் கொண்டது. பல்வேறு அமைப்புகளில் பாடல்கள் பாடப்பெற்றுள்ளன. viii. 501 /1931 /III.

Q6:4146

469. i. ஜெபங்களும் தியானங்களும் ; ii. தி. எஸ். பி. சி. கே., லண்டன் ; ஹிலால் பிரஸ், திருநெல்வேலி ; iii. 1931 ; iv. உ. ப. +. செ. மூ. ப. 124 ; v. 13×10 செ. மீ ; vi; . . . ; v. இதில் காலை மாலை கிறித்துவர் செய்யத்தக்க ஜெபங்களும் தனிச் ஜெபங்களும், ப்ரி நற்கருணை ஆயத்தம், முறைமை, தியானங்களும், போதனைகளும் அடங்கியுள்ளன. viii. 1094/1931/III.

Q6:4146

## 265.1 பரி. பவுல் ஞான ஸ்நானம்

பரி பவுல்

**470.** ரோமருக்கு எழுதிய நிருபத்தில் சில பாடக் குறிப்புகள்; ii. எஸ்.பி.சி.கே., லண்டன்; ஹிலால் பிரஸ், திருநெல்வேலி; iii. *1933*; iv. உ.ப. *31*; v. *13 × 11* செ.மீ; vi. ......; vii. இந்நூலில் ரோமருக்கு எழுதின நிருபத்தில் காணப்படும் சில பாடக் குறிப்புகள் உள்ளன; viii. *875/1934*/II.

**Q6:423**

## 265.2 திடப்படுத்துதல்

டானியேல், ஜி., ரெவரண்ட்

**471.** i. திடப்படுத்தலின் உபதேசம்; ii. லாலி எலக்ட்ரிக் பிரிண்டிங் பிரஸ், தஞ்சாவூர்; iii. *1934*; iv. உ.ப. *278*; v. *21 × 14* செ.மீ; vi. ......; vii. இது கிறித்துவச் சிறுவரைத் திடப்படுத்துவதற்காக எழுதப்பட்ட நூல். திடப்படுத்தலும் திடப்படுத்தல் பாடமும், திடப்படுத்தல் ஆயத்தக்காரருக்குரிய எச்சரிப்பு, முதலிய 50 அத்தியாயங்கள் கொண்டது. ஜெர்மன் மொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. viii. *1264/1934*/IV.

**Q6:426**

## 265.6 சுவிசேஷம்

சாமுவேல், ஏ.

**472.** i. சுவிசேஷ ஊழியத்தின் முறைகள் (உன்னத சினேகம்); ii. தி. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டி பார் இந்தியா, சென்னை; ஏ.எம். லெனக்ஸ் பிரஸ், பசுமலை; iii. *1932*; iv. உ.ப.+செ.மு.ப. *120*; v. *19 × 12* செ.மீ; vi. *0.8.0*; vii. இதில் எட்டுப் பாகங்களில் சுவிசேஷ ஊழியத்தின் முறைகள் கூறப்பட்டுள. சுவிசேஷச் செய்தி முதலியனவும், அப்போஸ்தலர் காலம் முதலியனவும், தற்காலத்தில் கையாளும் முறைகளும், சுவிசேஷ ஊழியனுக்கு இருக்க வேண்டிய இலட்சணங்களும், பர்மாவில் சுவிசேஷக் கூட்டத்தார் கையாளும் முறை முதலியனவும், சுவிசேஷக் கூட்டத்தாரை ஒழுங்குபடுத்தும் முறையும், தற்கால நிலைமையும் இருந்தவர் கடமையும் இதில் அடங்கியுள. viii. *614/1932*/IV.

**Q6:26**

## 280 கிறித்துவக் கோயில்கள்

**ஜோதி சொர்ணம்மாள், எஸ். எம்., சிவகாசி**

**473.** i. *ஆத்ம ஒழுக்கம்—(முதற் பதிப்பு);* ii. *நாடார் பிரஸ் சிவகாசி;* iii. *1932;* iv. *உ.ப. 61;* v. *17 ×10செ.மீ:* vi. ......; vii. *இது, ஏசு பிரானின் கோயிலுக்குச் செல்வதன் இன்றியமையாமை, பலன் முதலியவற்றைக் கூறும் சமயப் பிரச்சார நூலாகும்.* viii. *903/1932/*III

**Q6:3**

## 284.1 லூதர்

**மாசிலாமணி ஐயர், ஜே. எஸ்., பசுமலை**

**474.** i. *இந்தியா தேசத்து கிறிஸ்து மதச் சரித்திரம்;* ii. *தி கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி பார் இந்தியா, சென்னை; அமெரிக்கன் மிஷன் லிஞக்ஸ் அச்சியந்திர சாலை, பசுமலை;* iii. *1933;* iv. *உ.ப. 213;* v. *18 ×12 செ. மீ;* vi. *0—12—0;* vii. *இந்நூலில் இந்திய நாட்டில் கிறித்துவ மதம் பரவிய வரலாறு முழுவதும் ஆராயப்பட்டுள்ளது. 1800 ஆண்டு வரலாறு இதன்கண் அடங்கியுள்ளது.* viii. *52/1934/*I.

Q6:6

## 294 பிரம்ம ஞான சபை

**பெஸண்டம்மையார், லெட்பீடர் & மாஸ்டர் ஹீலேரியன்**

i. *தியாசொபி (திவ்ய ஞான போதம் பார்க்க)*; ii. ......; iii. ......; iv. *உ.ப. 1-52;* v. ......; vi. ......; vii. ......; viii. *1366/1935/*IV.

**Q4:33**

**475.** i. *திவ்ய ஞான போதம்;* ii. *டி.எம். சோமசுந்தரம் பிள்ளை, திருப்பத்தூர், வட ஆற்காடு; சாது அச்சுக் கூடம், சென்னை;* iii. *1935;* iv. *உ.ப. 100;* v. *18 ×12 செ.மீ;* vi. *2—0—0;* vii. *இந்நூலினுள் மூன்று நூல்கள் இடம் பெற்றுள்ளன. அவை பெசண்ட் அம்மையார் இயற்றிய தியாசொபி, லெட்பீடர் அவர்கள் இயற்றிய சதுட்டய ஆரிய உண்மைகள், மாஸ்டர் ஹீலேரியன் எழுதிய முக்தி நெறி விளக்கம் ஆகியவை. இந்நூல்கள் ஆங்கிலத்தில் எழுதப் பெற்றவை. தி.மு. மாணிக்கம் பிள்ளை தமிழில் மொழிபெயர்த்துத் தந்துள்ளார்.* viii. *1366/1935/*IV.

**Q4:33**

**மாஸ்டர் ஹிலேரியன்**

i. முக்திநெறி **விளக்கம்** (திவ்ய ஞான போதம் பார்க்க); ii ......; iii. ......; iv. உ.ப. *100;* v. ......; **vi.** ......; **vii.** ......; viii. *1366/1937/*IV.

**Q4:33**

**லெட் பீடர்**

i. **சதுட்டய ஆரிய உண்மைகள்** (திவ்ய ஞான போதம் பார்க்க); ii. ......; iii. ......; iv. உ.ப. *26;* v. ......; vi. ......; vii. ......; viii. ***1366/1935/*IV.**

**Q4: 33**

## 294.5 இந்து சமயம்

**அண்ணங்கராசாரியார், ஸ்ரீ., காஞ்சி.**

**476.** i. சேட்லூரார்மாய மயக்கம்; ii,. ஹாடன் அண்டு கம்பெனி, சென்னை; iii. *1933;* iv. உ.ப. *24;* v. *21×14* செ.மீ; vi. *0—3—0;* vii. திருவஹிந்திரபுரம் சேட்லூர் சுவாமிகள் எழுதிய நூல்களில் காணும் குறைபாடுகள் எடுத்து விளக்கப்பட்டுள்ளன. viii. *492/1934/*IV.

**Q2**

**477,** i. ரஹஸ்யத்ரய ஸாரப்ரமாணத் திரட்டின் ஆராய்ச்சி அண்டு வாதஸல்ய விஜயத் வஜயத்தின் முகவுரை; ii. விலாஸம், பிரஸ் ஸ்ரீரங்கம் அண்டு கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், காஞ்சீபுரம், iii. *1935;* iv. உ.ப. *16×31;* v. *21×14* செ.மீ; vi. ......; vii. இந்நூலில் வி. கே. இராமானுசாச்சாரியார் எழுதிய இரகசியத்ரயசார்ப் பிரமாணத்திரட்டு பற்றிய ஆராய்ச்சியும் வாத்சல்யார்த்த விவரணத்திற்கு மறுப்பாக உ.வே.எ.வி. கோபாலாச்சாரியார் எழுதிய நூலுக்குக் கண்டனமான வாத்சல்யார்த்தவிசயத்வசத்தின் முகவுரையும் உள. viii. *1076/1935/*II.

Q2

**478;** i. **ஸத்ஸம்ப்ரதாயப்படி—(அண்ணு வைபவ விளக்கம்);** ii. ஹாடன் அண்டு கம்பெனி, சென்னை; iii. *1934;* iv. உ.ப. *37;* v. *21×14* செ.மீ; vi. *0—4—0;* **vii.** இது அண்ணு வைபவம் என்னும் நூலுக்கு விளக்கம் தரும் வகையில் அமைந்துள்ளது. viii. *493/**1934/*IV.**

**Q2**

அரிதாசர்

479. i. இரு சமய விளக்கம் (வசனம்) ; ii. ஹரி ஸமய திவாகரப் பிரசுரம் ; ஹரி சமய திவாகரம் பிரஸ், மதுரை ; iii. 1933 ; iv. உ.ப. 30+7 ; v. 21 ×14 செ.மீ. ; vi. 1–8–0 ; vii. இந் நூலில் சைவ, வைணவக் கொள்கைகளை ஆகமவல்லி, ஆரணவல்லி யென்ற பெண்களிருவர் கூற்றில் வைத்து விளக்கி, முடிவில் திருமாலே பரம்பொருள் என்பதை நிலை நாட்டும் இரு சமய விளக்கங்கள் அடங்கியுள்ளன. இதனை உரைநடையில் பண்டித ஆ. அரங்க ராமா னுஜப்பிள்ளை எழுதியுள்ளனர். ஆசிரியரின் வாழ்க்கைக் குறிப்பும், நூலாராய்ச்சியும், மு. ராகவையங்கார் அவர்களால் எழுதப்பட்டுள்ளன. viii. 46/1934/I.

Q2

480. i. இந்து மதத்தின் சிறப்பு ; ii. சரஸ்வதி சங்கம் ; சென்னை ; சரஸ்வதி சங்கம் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1931 ; iv. உ.ப. 22 ; v. 18 ×12 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. இந்து சமயத்தின் சிறப்பு உரை யாடல் வாயிலாக இந் நூலில் விளக்கப்பட்டிருக்கிறது. இந்து சமயப் பழக்க வழக்கங்களும் அவற்றிற்குரிய காரணங்களும் எடுத்து இயம்பப்பட்டுள்ளன. viii. 519/1931/IV.

Q2

இராகவன், அ., சாத்தான்குளம்

481. i. கடவுளை நிந்திக்கும் கயவர்கள் யார் ? (2-ம் பதிப்பு) ; ii. குடியரசுப் பதிப்பகம், ஈரோடு ; உண்மை விளக்கம் பிரஸ், ஈரோடு ; iii. 1934 ; iv. உ.ப. 44 ; v. 18 ×12 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இந் நூலில் திருநெல்வேலியில் நடைபெற்ற மூன்றாவது சுயமரி யாதை மாநாட்டில் அ. இராகவன் அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவு அடங்கியுள்ளது. இதன்கண் கடவுளை நிந்திக்கும் கயவர்கள் யார் என்பது புராண இதிகாச நூல்களிலிருந்து மேற்கோள் காட்டிக் கூறப்பட்டுள்ளது. viii. 455/1934/IV.

Q2

இராமஸ்வாமி, இராமநுஜதாஸர், டி.டி.

482. i. ஸ்ரீ வசன பூஷண ப்ரமாணத் திரட்டு (அரும் பத விளக்கம் 2-ம் பதிப்பு) ; ii......... ; ஸ்ரீவிலாஸம் பிரஸ், ஸ்ரீரங்கம் ; iii. 1935 ; iv. உ.ப. 221 ;

v. *22* × *14* செ.மீ. ; vi. *1–0–0* ; vii. இதன்கண் **463** வடமொழிச் சூத்திரங்களும், அவற்றிற்குத் தமிழில் விளக்கங்களும், மேற்கோள்களும் தரப்பட்டுள்ளன. **வைணவக் கொள்கை விளக்க நூல்.** viii. *1038/1935/*I.

**Q2**

**483.** i. கடவுளும், அவரது குணவிசேஷங்களும் ; ii. பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரஸ், பாளையங் கோட்டை ; iii. *1935* ; iv. உ.ப. *100* ; v. *18* × *12* செ.மீ. ; vi. *0–4–0* ; vii. இந் நூலில் கடவுளது பண்பு நலன்களும், அவரது பெருமைகளும், விளக்கப் பட்டிருக்கின்றன. கிறித்துவ சமயத்தார்க்கென எழுதப் பெற்றதாகும் viii. *1594/1935/*I.

Q2

கருணையானந்த ஞான பூபதிகள், திருவாரூர்

**484.** i. அன்பே கடவுள் ; ii. **எம். ஏ. நாவலர் அண்டு சன்ஸ்,** திருவாரூர் ; கருணாநிதி பிரஸ், விஜயபுரம் ; iii. *1933* ; 'v. உ.ப. செ.மு.ப. *48* ; v. *18* × *12* செ.மீ. ; vi. *0–6–0* ; vii. இது அன்பே கடவுள் என்பதை எடுத்துக் காட்டுகளுடன் இனிது விளக்குவது. viii. *844/1933/*I.

Q2

சிவானந்த சரஸ்வதி சுவாமி (தொ.து.)

**485.** i. மதாராய்ச்சிக் குறிப்புகள் ; ii. கேசவனுண்ணி நாயர், ராஜா பிரஸ், மதுரை ; iii. *1932* ; iv. உ.ப. *32* ; v. *21* × *14* செ.மீ. ; vi. *0–2–0* ; vii. இதில் சமயங் களைப் பற்றிய செய்திகள் ஆராயப்பட்டுள. முதற் பகுதி வினவும், விடையுமாய் உள்ளது. பின் ஆராய்ச் சியும் உடன்பாடும், க்ஷத்திரிய தர்மத் தலைவர்கள், ஆலய வழிபாடு முதலிய பலவும் விளக்கப்பட்டுள. viii. *282/1932/*II.

**Q2**

சௌந்தரராஜம் பிள்ளை, பொ.

**486.** i. **ஆஸ்திக விஞ்ஞான** சாகரம் அல்லது **கடவுளும்** பிரபஞ்சமும், என்னும் துர்வாதத்திற்கு மறுப்பு; ii. **கந்தன் அச்சுக்கூடம், சென்னை !**

iii. *1932* ; iv. உ.ப. *78* ; v. *18* × *12* செ.மீ. ; vi. *0—4—0* ; vii. இது கடவுளும், பிரபஞ்சமும் என்னும் நூலுக்கு மறுப்பாகும். இதன்கண் மேனாட்டு ஜடத்துவ ஆராய்ச்சியின் கருத்துக்கள் தவறு என்றும், கீழ்நாட்டு அறிஞர்களின் மனோதத்துவ பகுத்தறிவு மேன்மையுற்றது என்றும் விளக்கப்பட்டிருக்கிறது; viii. *763/1933*/II.

**Q2**

**நடேசன், ஆர்., சென்னை**

*487.* i. ஹிந்து மத சம்பந்தமான இனங்களைக் குறித்த ஆக்ட் ; ii. வி. ராமசுவாமி சாஸ்தருலு அண்டு ஸன்ஸ், சென்னை: வாவில்லா பிரஸ், சென்னை ; iii. *1934* ; iv. உ.ப. *118+6* ; v. *18* × *12* செ.மீ. ; vi.......... ; vii. இந்து சமயக் கோவில்கள், மடங்கள் சரிவர நடைபெற இயற்றப்பட்ட சட்டங்கள் இந் நூலில் அடங்கியுள்ளன. இதன்கண் *85* பிரிவுகள் உள்ளன; viii. *1386/1934*/III.

**Q2**

**நாகி செட்டியார், எஸ். சி. (மொ. து.)**

*488.* i. ஸ்ரீ வைஷ்ணவமும், வீரசைவமும் ; ii. குரு பசவா அண்டு கம்பெனி லிமிடெட், சென்னை ; பென்ரோஸ் அண்டு கம்பெனி, மதருஸ் ; iii. *1934* ; iv. உ.ப. *29*; v. *18* × *12* செ.மீ. ; v. *0—2—0* ; vii. இந்நூல் கன்னட மொழியிலிருந்து திரு. நாகி செட்டியாரவர்களால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. இதன்கண் வைணவ, சைவ சமயங்களிலுள்ள ஒற்றுமை, வேற்றுமைகள் விளக்கப் பெற்று சிவபெருமானே எல்லாம் வல்ல இறைவன் என்று நிரூபிக்கப்பட்டுள்ளது. viii. *38/1934*/IV.

**Q2**

*489.* i. நாஸ்திக இயக்க மண்டையை உடைக்கும் தண்டாயுதம் ; ii. அ. ம. சங்கம், தூத்துக்குடி ; சைவ பிரகாசம், தூத்துக்குடி ; iii. *1933* ; iv. உ.ப. *26* ; v. *18* × *12* செ.மீ. ; vi.......... ; vii. நாத்திக பிரசாரத்திற்கு மறுப்புரையாக இந்நூல் வெளிவந்துள்ளது. ஈ. வே. ரா. பெரியார் அவர்களையும், அவர்களின் தோழர்களையும் சாடி வரையப்பட்டுள்ளது; viii. *1085/1933*/IV.

**Q2**

பகத்சிங், கே.

**490.** i. நான் நாஸ்திகன் ஏன்? ii. பகுத்தறிவு நூற் பதிப்புக் கழகம் லிமிடெட், ஈரோடு; உண்மை விளக்கம் பிரஸ், ஈரோடு; iii. 1934; iv. உ.ப. 46; v. 18 × 12 செ.மீ.; vi. 0–3–0; vii. சர்தார் கே. பகத்சிங் என்பவர் லாகூர் சிறையினின்று தம் தந்தையாருக்கு எழுதிய கடிதங்களின் தொகுப்பே இந்நூலாகும். இக்கடிதங்களைத் தமிழில் மொழி பெயர்த்தவர் தோழர் ப. ஜீவானந்தம். viii. 450/1934/IV.

Q2

பாகவத ராமநாத சாஸ்திரி, தாரமங்கலம்

**491.** i. ஆஸ்திக ஞான தீபம் என்னும் ஹிந்து மத சம்ரக்ஷணக் கீர்த்தனைகள்; ii.; ஸ்ரீவெங்கடேச பிரஸ், சேலம்; iii. 1933; iv. உ.ப.+செ.மூ.ப. 72; v. 14 × 10 செ.மீ.; vi. 0–4–0; vii. இதன்கண் பல்வேறு இசைகளில் 32 பாடல்கள் அமைந்துள்ளன. ஆத்திகத்தின் பெருமைகளும், விளக்கங்களும் இந்நூலின் பிற்பகுதியில் உரை நடையில் வினா, விடை வடிவில் அமைந்துள்ளன. viii. 746/1934/II.

Q2

பெரியநாயகம், ஏ, ஸ்ரீ வில்லிபுத்தூர்,

**492.** i. இந்து மார்க்கம் இந்துக்களுடையதா? ii. டி. ஏ. எஸ். ராகவா பிரிண்டிங் ஒர்க்ஸ், ஸ்ரீவில்லிபுத்தூர்; iii. 1933; iv. உ.ப. 12; v. 21 × 14; செ.மீ.; vi..........; vii. இந்துக்கள், புத்தர், மகமதியர், கிறித்துவர்கள் எல்லாரும் ஐக்கியப்பட்டால் உலக சமாதானம் பிறக்கும் என்பதைக் காட்ட இது எழுதப்பட்டது. இதில் இந்து மதம், கிறித்துவ மதம் ஆகியவற்றின் ஒற்றுமைகளும், பிறவும் காட்டப்பட்டுள. viii. 190/1933/II.

Q2

மாசிலாமணி ஐயர், ஜே. எஸ்., பசுமலை

**493.** i. ஹிந்து மத சங்கிரகம்; ii. தி கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி பார் இந்தியா, சென்னை; டயோசிசன் பிரஸ், சென்னை; iii. 1934; iv. உ.ப. 310; v. 18 × 12 செ.மீ.; vi. 1–8–0; vii. இந்து சமயம் வரலாற்று முறையில் நன்கு ஆராயப்பட்டுள்ளது.

இதன்கண் வரலாற்றுக் காலத்துக்கு முன்னைய சமய நிலையிலிருந்து ஐரோப்பியருடன் தொடர்பு ஏற்படும் நிலைகள்வரை ஆராயப்பட்டுள்ளன. viii. 846/1934/III.

Q2

494. i. ரிக்வேதம் (அஷ்டகம் 1 அத்தியாயம் 2); ii. சிவத்யாநாநந்தா, வேத பிரவசன மந்திர், சென்னை; பென்ரோஸ் அண்டு கம்பெனி, நூர்ஜஹான் பிரஸ், சென்னை; iii. 1933; ; iv. செ. மூ. உ. ப. 128; v. 22 × 14 செ. மீ.; vi. 0–8–0; vii. இது மாதந்தோறும் வெளிவரும் வேத பத்திரிகையாகும். இப்பகுதியில் ரிக் வேதத்தின் 38 வருக்கமும், 13 சூக்தங்களும் 189 இருக்குக்களுமுள்ளன. தமிழாக்கம் செய்யப்பட்டுப் பொருளும் தரப்பட்டுள்ளது. viii. 81/1933/III.

Q2

495. i. ரிக் வேதம் (அஷ்டகம் 1 அத்தியாயம் 3); ii. சிவத்தியாநாநந்த மகரிஷி, சென்னை; நூர்ஜஹான் பிரஸ், சென்னை; iii. 1933; iv. செ.மூ.உ.ப. 129–200; v. 22 × 14 செ.மீ.; vi. 4–0–0; vii. இது ரிக் வேதத்தின் ஒவ்வொரு அத்தியாயத்தையும், ஒவ்வொரு திங்களும் தாங்கிவரும் வெளியீடாகும். இது மூன்றும் அத்தியாயத்தைக் கொண்டுள்ளது. viii. 781/1933/III.

Q2

496. i. ரிக் வேதம் (அஷ்டகம் 1 அத்தியாயம் 4); ii. சிவத்தியாநாநந்த மகரிஷி, சென்னை; நூர்ஜஹான் பிரஸ், சென்னை; iii. 1933; iv. செ.மூ.உ.ப. 201–264; v. 21 × 14 செ.மீ.; vi. 0–8–0; vii. ரிக்வேத பாடல்கள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு அவற்றிற்கு வேண்டிய விளக்கங்களும் உள. வருக்கம் 2, மண்டலம் 1 அநுவளிம் 9 ஆக்தம் 5 எனும் பகுதி அடங்கியுள்ளது. viii. 1352/1933/III.

Q2

497. i. ரிக் வேதம் (அஷ்டகம் 1 அத்தியாயம் 5) ; ii. சிவத்தியாநாநந்த மஹர்ஷி, சென்னை ; நூர்ஜஹான் பிரஸ், சென்னை ; iii. 1933 ; iv. செ.மூ.உ.ப. 265–328 ; v. 22 ×14 செ மீ. ; vi. 0–8–0 ; vii இந் நூலில், ரிக் வேதத்தின் சாஷ்டகம் 1 அத்தியாயம் 4 விளக்கப்பட்டுள்ளது. viii. 192/1933/IV.

Q2

498. i. ரிக் வேதம் (அஷ்டகம் 1 அத்தியாயம் 6) ; ii சிவத்தியாநாநந்த மகரிஷி, சென்னை ; நூர்ஜஹான் பிரஸ், சென்னை ; iii 1933 ; iv. செ.மூ.உ.ப. 329–392 ; v. 21 ×14 செ மீ. ; vi. – ; vii அஷ்டகம் 1 அத்தியாயம் 6 எனும் பகுதிக்குத் தமிழாக்கமும், உரை விளக்கமும், அடங்கியுள்ளன viii 786/1933/IV

Q2

499. i. ரிக் வேதம் (அஷ்டகம் 4 பகுதி—2) ; ii. சிவத்தியாநாநந்த மகரிஷி, சென்னை ; நூர்ஜஹான் பிரஸ், சென்னை ; iii. 1931 ; iv. செ.மூ.ப. 29–76 ; v. 21 ×14 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. இதில் அஷ்டகம் நான்கில் முதலாம் அத்தியாயத்தில் உள்ள கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. viii 741/1931/I.

Q2

ஜம்புநாதன், எம். ஆர்,

500. i. சதபத பிராமணம் ; ii. ஜம்பு நாத புஸ்தக சாலை, சென்னை ; கேசரி பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை ; iii. 1933 ; iv. உ.ப. 91 ; v. 18 ×12 செ.மீ. ; vi. 0–9–0 ; vii. யஜுர் வேதக் கதைகளும், தோத்திரங்களும் அடங்கிய நூல். viii. 1351/1933/I.

Q2

ஸ்ரீநிவாஸ அய்யங்கார், திருவஹீந்திரபுரம்

501. i. பையாவின் ப்ரலவ கண்டனம் (முதற் பாகம்) ; ii. நிகம பரிமள அச்சுக்கூடம், சென்னை ; iii. 1933 ; iv. உ.ப. 24 ; v. 21 ×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இந் நூல் மறுப்புக்கு மறுப்பாகும். இது ஸ்ரீதேசிகனும், அவருடைய ஸ்ரீஸூக்திகளும் எனும்

இரத்தினசாமி நாடார், பூ. மூ. நா.

505. i. தோத்திரப் பாக்கள் ; ii. உண்மை விளக்க பிரஸ், விருதுநகர் ; iii. 1933 ; iv. செ. மூ. எ. 10 ; v. 16 ×10 செ. மீ. ; vi......... ; vii. விருதுநகரச் சார்பு, சின்னமூப்பன்பட்டி செழுமலர்ச் சோலையின்கண் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் மாலையம்மன் என்ற நாச்சியாரம்மன் மீதும் அவ்வாலய பரிவார தெய்வங்களின் மீதும் பாடப் பெற்ற ஆசிரிய விருத்தப் பாக்கள் அடங்கியுள. காப்புச் செய்யுள் ஒன்றுள்ளது. viii. 460/1933/I.

Q2:4

இராமதேவர்

i. இராமதேவர் பூஜாவிதி—10—(பார்க்க பெரியஞானக் கோவை) ; ii. அ. இரங்கசாமி முதலியார் சன்ஸ், சென்னை ; பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1933 ; iv. செ.மூ.எ. 10 ; v............ ; vi............ ; vii. இப்பகுதியிலுள்ள பாடல்களில் பூசை செய்யும் முறைகளும் மந்திரங்களும் கூறப்பட்டுள்ளன. ஒவ்வொரு பூசையின் பலன்களும் தரப்பட்டுள்ளன. இதன்கண் 10 பாடல்கள் அடங்கியுள்ளன. viii. 519/1934/I.

Q2:4

இராமலிங்க சுவாமிகள்

506. i. திருவருட்பா பூஜா முறைத் திரட்டு ; ii. ஸ்ரீ பாலசரஸ்வதி அச்சுக்கூடம், தஞ்சை ; iii. 1931 ; iv. செ.மூ.எ. 181 ; v. 14 ×11 செ.மீ. ; vi. 0—4—0; vii. இதில் பூசை செய்வதற்குப் பயன்படும் வழிபாட்டுப் பாடல்கள் அடங்கியுள்ளன. கடவுள் வணக்கம், சிற்ப சபை மகிமை, மஹாதேவமாலை, பொது நூல் வேதம், அநுபவ நூல், உபநிடதம், சிறப்பு நூல் ஆகமம், கலைகள் பேசு நூல், திருக்கதவந் திறத்தல், சிவயோக நிலை, நாமாவளி, தனிப்பாடல் பிரதட்சன நாமாவளி, பரமசிவ விளக்கம் முதலியன அடங்கியுள. viii. 347/1931/II.

Q2:4

இராமலிங்கம், பின்னலூர்

507. i. சிரோத்னப் பாமாலை ; ii. குகன் பிரஸ், சிதம்பரம் ; iii. 1933 ; iv. செ.மூ.எ. 10 ; v. 14 ×9 செ.மீ. ; vi............ ; vii. இந் நூலில் புண்ணியத்தலமான

திருவண்ணுமலையில் வாழ்ந்த ரமண மகரிஷிகளின் மீது புனையப்பெற்ற 10 ஆசிரிய விருத்தப் பாக்கள் அமைந்துள்ளன. பாடல்கள் எளிமையும், இனிமையும் உடையவை. viii. 1001/1934/II.

Q2:4

508. i. நாம் அடைய வேண்டிய தெய்வவுணர்ச்சி; ii. கே. முத்துக்கிருஷ்ணப் பிள்ளை, சிதம்பரம்; குகன் பிரஸ், சிதம்பரம்; iii. 1934; iv. உ.ப. 16; v. 15 × 9 செ.மீ.; vii. இந் நூலில் நாம் பெற வேண்டிய ஆத்ம உணர்ச்சிகளும், அவற்றைப் பெறுவதற்கு நாம் செய்ய வேண்டிய செயல்களும், பாவங்களை நீக்கும் முறைகளும் விளக்கப்பெற்று உள்ளன. viii. 1009/1934/II.

Q2:4

இராமாநுஜ அய்யங்கார், வி.

509. i. பிரபன்ன நூஷ்டான பாஸ்கரம்; ii. சிங்காரம் முத்ராலயம். திருச்சி; iii. 1934; iv. செ.மு.உ.ப. 97; v. 22 × 14 செ.மீ.; vi. 1–8–0; வேத வேதாந்த புராண இதிகாசங்களில் கூறப்பட்டுள்ள வைணவ சமயத்தார் ஒழுக வேண்டிய ஒழுகலாறுகள் இந்நூலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இதன்கண் 72 நடைமுறை விதிகள் தக்க மேற் கோள்களுடன் விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 427/1934/III.

Q2:4

இராமானந்த சுவாமிகள், சிரவணபுரம்

510. i. தியான முறை நீதிவாக்கியம் (இரண்டு பாகங்கள்); ii. கேசரி அச்சுக்கூடம், சென்னை; iii. 1931; iv. உ.ப.செ.மு.ப. 39; v. 18 × 12 செ.மீ.; vi. 0–4–0; vii. இது தியான முறையை விளக்கிக் கூறுகிறது. இரண்டு பாகங்களையுடையது. இறுதியில் 147 இனிய நீதி வாக்கியங்களையுங் கொண்டது. viii. 1547/1931/I.

Q4:2

இராஜகோபால் பிள்ளை, ம.

511. i. துளஸீ மஹாத்மியம் ; ii. ஏ. இரங்கசாமி முதலியார் அண்டு ஸன்ஸ், பூமகள் விலாசம் பிரஸ், சென்னை ; iii. 1932 ; v. உ.ப. 52 ; v. 21 ×14 செ.மீ. ; vi.......... ; vii. இந் நூலில் துளசிச் செடியின் பெருமை பலவாருகக் கூறப்பட்டுள்ளது. viii. 1467/1933/I.

Q2:4

கணபதியா பிள்ளை, எம்., குன்றுக்குடி

512. i. ஸ்ரீ பனையூராண்டவர் என் குருமாலை, ii. தாம்பாள் பிரஸ், மதுரை ; iii. 1931 ; iv. செ.மு.எ. 60 ; v. 21 ×14 செ.மீ. ; vi............ ; vii. இந் நூல், சங்கரநாராயணருக்கும், சார்தவசி அம்மையாருக்கும் மகனுய் அவதரித்து, ராமகிரி அப்பன் அருளால் வளர்ந்த பனையூர் ஆண்டவர் மீது பாடப்பெற்ற 60 சிந்து கண்ணிகளைக் கொண்டுள்ளது. இரண்டாம் அடி 'பனையூர் என்குருவே' என்றும் ஈற்றடி 'எனையாளுந் தருவே' என்றும் எல்லாப் பாடல்களிலும் முடிகின்றன. viii. 499/1931/III.

Q2:4

கருணையானநத ஞானபூபதிகள், திருவாரூர்

513. i. அஷ்டாங்கயோகம் ; ii. எம். ஏ. நாவலர் அண்டு சன்ஸ், திருவாரூர் ; கருணாநிதி பிரஸ், விஜயபுரம் ; iii. 1933 ; iv. உ.ப. 40 ; v. 18 ×12 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. இது அட்டாங்கயோகம் பற்றிக் கூறுவது. இதில் இமயவிளக்கம், யோகாசனம், பிரத்தியகாரம், தாரணை, தியானம், சமாதி, ஆனந்த கீதம் ஆகியன அடங்கியுள. viii. 843/1733/I.

Q2:4

i. கருவூரார் பூஜாவிதி (பார்க்க பெரிய ஞானக் கோவை) ; ii........... ; iii.......... ; iv. செ.மு.ப. 363–372 ; v............ ; vi............. ; vii. இறைவனை வழிபடும் முறைகளும் தத்துவ உண்மைகளும் அடங்கிய நூல் viii 519/1934/II

Q2:4

கலியாணசுந்தரன், திரு. வி.

514. i. இமயமலை அல்லது தியானம் ; ii. பாலன் பதிப்புக் கழகம், சென்னை ; சாது அச்சுக்கூடம், சென்னை ; iii. 1931 ; iv. உ.ப. 74 ; v. 16 × 10 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. இதன்கண் இமயத்தின் அகப் புறப் பொருள், இமயத்தின் தொன்மை விழுப்பம், மலைகளின் சிறப்பு, மலைக்கும் மக்கள் வாழ்வுக்குமுள்ள தொடர்பு, மலை வாழ்வின் வெற்றி, உயர்நோக்கின் மேன்மை, அமைதியில் அறிவு விளக்கம், கோபுரங்களின் நோக்கமும் நுணுக்கமும் உலகில் ஆங்காங்கே தோன்றி குருமார்கள் மலையுடன் தொடர்பு கொண்டமை, தமிழரின் மலைவாழ்வு, காவியங்களில் மானத மலைப்படைப்பு, மலைவாழ்வால் உடலும் உயிரும் நலனுறுதல், தற்கால அமைதியில்லா வாழ்வுச் சிறுமை, மேல்நாட்டுப் புலவர்கள் மலையைக் கொண்ட சிறப்பு முதலிய பல செய்திகள் விளக்கப்பட்டுள. viii. 88/1931/IV.

Q2:4

காசிவிஸ்வநாத சாஸ்திரிகள், எலி. (மொ.து).

515. i. ஆதித்யஹ்ருதய ஸ்தோத்திரம் ; ii. ஜெனரல் டிரேடிங் கம்பெனி, மதராஸ் ; எச். பி. பிரஸ், மதருஸ் ; iii. 1935 ; iv. செ.மு.உ.ப. 44 ; v. 12 × 9 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இராமர் இராவணனுடன் போர் புரிந்து களைப்படைந்த காலத்தில் அகத்தியர் முதலானோர் இராமனுக்குக் கூறிய ஆதித்தனை வணங்கும் தோத்திரப் பாக்கள் இதன்கண் காணப்படுகின்றன. வட மொழியில் அமைந்த பாக்கள் தமிழ் எழுத்துக்களில் அச்சிடப்பெற்று, அவற்றிற்குரிய பதவுரை, கருத்துரை முதலிய விளக்கங்களும் தரப்பட்டுள்ளன. இதனால் எல்லா வகையான பாவங்களும் நீங்கி வெற்றி கிடைக்கும் என்றும் கூறப்பட்டுள்ளது. viii. 606/1935/II.

Q2:4

516. i. ஸ்தோத்ரமாலா அல்லது ஸ்துதி மஞ்சரி (4-ம் பதிப்பு) ; ii. ஜெனரல் டிரேடிங் கம்பெனி, சென்னை ; எச், பி, பிரஸ், சென்னை ; iii. 1935 ; iv. செ.மு.ப. 66 ; v. 12 × 9 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. இது ஒரு திரட்டு நூலாகும். இதன்கண் விநாயகர் பஞ்சரத்தினம் சிவலிங்காஷ்டகம், தண்டபாணி பஞ்சரத்தினம், அம்பாள் நவரத்தினமாலை, அம்பாள் நாமாவளி, மீனாட்சி பஞ்சரத்தினம், அன்னபூர்ணஷ்டகம், ராஜ ராஜேஸ்வரி அஷ்டகம், தட்சணாமூர்த்தி அஷ்டகம், கோவிந்தாஷ்ட

கம், கனகதாராஸ்தவம், மகாலட்சுமி அஷ்டகம், லட்சுமி நரசிம்ம ஸ்தோத்திரம், அனுமத் பஞ்சரத்தினம், தசாவதார ஸ்தோத்திரம், நரசிம்ம ஸ்தோத்திரம், ராம ஸ்தோத்திரம், முதலிய பாடல்கள் அடங்கியுள்ளன. viii. *1279/1935/*II.

**Q2:4**

காலாங்கிநாதர்

**516.** i. ஞானபூஜாவிதி 80 (வைத்தியவாதயோக ஞான சாஸ்திரத் திரட்டு பார்க்க 2-ம் பாகம் 2-ம் பதிப்பு); ii. ......; iii. செ.மூ.எ. *1+80* ; iv. .........; v. .........; vi. ............; vii. இப் பகுதியில், முறைப்படி மலர் தூவி வழிபாடியற்றும் வகைகளும், குளிசம், விபூதி ஆகியவற்றின் பயன்களும் கூறப்பெற்றுள. viii. *1322/1934/*II.

**Q2:4**

குமார தாதாசாரி, ச.

**517.** i. ஸ்ரீஆபஸ்தம்ப அமாவாஸ்யை தர்ப்பணம் ; ii. பட்டாபிராமன் கம்பெனி, சென்னை ; பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. *1935* ; iv. செ.மூ.ப. *31* ; v. *12* × *9* செ. மீ ; vi. *0—2—0* ; vii. இந்நூல் வடகலை, தென்கலை வகுப்பினர் பொதுவாகக் கடைப்பிடித்தொழுக வேண்டிய காலைக் கடன்களும், அமாவாசை போன்ற நாட்களில் செய்ய வேண்டிய நீத்தார் கடன்களும் விளக்கப்பட்டுள்ளன. அக்காலங்களில் சொல்லவேண்டியமந்திரங்களும் தமிழ் எழுத்துக்களில் அச்சிட்டுள்ளன. viii. *251/1935/*III.

**Q2:4**

சங்கராசாரியார்

**518.** i. துவாதச மஞ்சரிகா ஸ்தோத்திரம் என்னும் பஜகோவிந்தம் (மூலமும் தமிழ் உரையும்); ii.எம். வடிவேலு முதலியார், மார்க்கண்டன் பிரஸ் ; iii. *1934* ; iv. செ.மூ.ப. *15* ; v. *12* × *9* செ. மீ ; vi. *0—1—0* ; vii. இந்நூலில் பஜகோவிந்தம் எனும் *14* சுலோகங்களும், அவற்றிற்குரிய பொருளும் தமிழில் தரப்பட்டுள்ளன. கோவிந்த சதுர்தச மஞ்சரிகா தோத்திரப் பாக்களும், அவற்றிற்குரிய பொருளும் தரப்பட்டுள்ளன. மதுரைத் தமிழ்ச் சங்க வித்வான் கே. எஸ். சுந்தரம் அவர்கள் தமிழில் உரைச் சுருக்கம் எழுதி உள்ளார். viii. *1350/1935/*II.

**Q2:4**

சரவண சுவாமிகள்

519. i. தஞ்சை குப்புசுவாமிராஜூவென்னும் பூர்வாச்சிரம நாமம் பூண்டிருந்த பிரமாநந்த சுவாமிகளின் தோத்திரப் பா: ii. யதார்த்தவசனீ அச்சுக்கூடம், கும்பகோணம் ; iii. 1932 ; iv. செ.மூ.எ. 100; v. 18 ×12 செ. மீ ; vi. 0—2—0 ; vii. இதில் சுவாமிகள் மீது பாடப்பெற்ற அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தப் பாக்கள் 100 அடங்கியுள்ளன. viii. 1646/1932/III.
Q2:4

520. i. சர்வம் குருமயம் அல்லது குருபக்தி ; ii. ஸ்ரீபாரதி பிரஸ், சென்னை ; iii. 1933 ; iv. உ.ப.+ செ.மூ.ப. 316 ; v. 18 ×12 செ. மீ ; vi. ........; vii. பரம் பொருளைக் குருவாக வழிபடப் பயன்படும் வண்ணம் சில நூல்களிலிருந்து தொகுக்கப்பட்ட குரு தோத்திரப் பாக்கள் இதில் அடங்கியுள. viii. 483/1933/II.
Q2:4

சாம்பமூர்த்தி தேசிகர், ஸ்ரீமத் பூவாளூர்

521. i. நித்திய கன்ம அநுட்டான விதி ; ii. பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1933 ; iv. உ.ப. + செ.மூ.ப. 48 ; v. 12 ×8 செ. மீ ; vi. 0—2—0 ; vii. சைவர் நாள்தோறும் கடைப்பிடித்தொழுக வேண்டிய அநுட்டான விதிகளையும், அநுட்டான மூல மந்திரம், பிரம மந்திரம், அங்க மந்திரம், ஆசமன மந்திரம் முதலியவற்றையும், அநுட்டானம் செய்யும் முறைகளையும் விளக்கிக் கூறுகிறது இச்சிறு நூல். மேலும், கணபதி துதி, முருகன் துதி முதலிய துதிப்பாக்களும் சைவத்தின் உட்பொருளை விளக்கும் உரையாடலும் அடங்கியுள்ளன. viii. 365/1933/IV.
Q2:4

சிதம்பரம் பிள்ளை, வ. உ.

522. i. சாந்திக்கு மார்க்கம் ; ii. வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி ; iii. 1934; iv. உ.ப. 119 ; v. 18 ×12 செ. மீ ; vi. 0—12—0 ; vii. இந்நூலில் தியான வலிமை, ஆன்ம வலிமையை அடைதல், சுயநலமற்ற அன்பை அனுபவித்தல், கடவுளோடு ஐக்கியமாதல், ஊழியம் புரிதல் என்ற தலைப்புகளில் கட்டுரைகள் உள. viii. 312/1934/IV.
Q2:4

523. i. சிவநித்திய பாராயணாஷ்டகம் : ii . சரஸ்வதி போதினி புத்தகசாலை ; சரஸ்வதி போதினி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1935 ; iv. செ.மூ.ப. 88 ; v. 18 ×11 செ.மீ. ;

vi. *0—5—0* ; vii. இந்நூலில் விநுயக பூஜாவிதி விக்னேஸ்வர ஷோடசநாம பிரதிபாதக சுலோகம், ஸ்தோத்திரம், விக். சதநாமாவளி, கணனுயகாஷ்டகம், சுப்பிரமண்ய பூஜாவிதி, சோடச நாமாநி, அஷ்டோத்தர சத நாமஸ்தோத்திரம், நாமாவளி, யஷ்டகம், லிங்கா பூஜாவிதி, துவாதச ஜ்யோதிர் லிங்காநி, அஷ்டோத்திர சதநாமாவளி, அஷ்டகம், பில்வாஷ்டகம், அஷ்ட பில்வ நாமாநி, தட்சணுமூர்த்தி தோத்திரம், அஷ்டகம், அர்த்தனரிஸ்வரா ஷ்டகம், காலபைரவாஷ்டகம், சந்திரசேகர அஷ்டகம், பார்வதீ வல்லபாஷ்டகம் முதலிய துதிப் பாடல்கள் உள. viii. *436/1935/*IV.

**Q2:4**

**சிவப்பிரகாச குமரகுரு தேசிகர், மதுரகவி**

**524.** i. சிவஞானத் தேவனம் ; ii. ஸ்ரீஜெய விநாயக சிவப்பிரகாச அச்சுக்கூடம், சென்னை ; iii. *1933* ; iv. செ. மூ. ப. *28* ; v. *23×15* செ. மீ ; vi. ............; vii. இந்நூலில், சிவோபதேச மாலையில் **37** விருத்தப் பாக்களும், சிவப்பிரகாச தேசிக மாலையில் *11* பாக்களும் உண்மையுணர்த்துங் கண்மணி மாலையில் *11* பாக்களும் சிவமயத் தெளிவுறுந் திருத்தகு மாலையில் *10* பாக்களும், கருணீகமாலையில் *11* பாக்களும் அரஹரமாலையில் *11* பாக்களும், ப்ரத்துவப் பசுவதிமாலை *11* பாக்களும், போற்றி சட்டக மாலையில் **7** பாக்களும் அடங்கியுள்ளன. viii. *2/1933/*III.

**Q2:4**

**சுப்ரமணியையர், குரு.**

**525.** i. ஸ்தோத்திரங்கள் ; ii. வாணி. விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம் ; iii. *1932* ; iv. உ.ப. + செ. மூ.ப. *14*; v. *18×12* செ. மீ ; vi. ............; vii. ஆச்சாரிய தோத்திரமாகிய இது சங்கராசாரிய சுவாமிகளுடைய பெருந்தவமுடைமை, கருணை முதலிய பெருமைக் குணங்களைத் தெரிவிப்பதோடு அவர் நிகழ்த்திய பரகாயப் பிரவேசம், ஆகாசகமனம், பொன்மாரி பொழிவித்தல், இறந்தவரை உயிர்ப்பித்தல், நதியை நமக்கு வேண்டிய இடத்தில் அழைத்தல் முதலிய எவர்க்குஞ் செய்தற்கருஞ் செயல்களையும் நன்கு விளக்குவது. viii. *8/1932/*IV.

**Q 2:4**

சுப்ராய தேசிகர், தி. அ. (தொ.து.)

**526.** i. சைவாகம தீக்ஷா அனுஷ்டான பூஜாவிதி ; ii. மனோரஞ்சினி பிரஸ், சென்னை ; iii. *1932* ; iv

உ.ப. *16* ; v. *8 ×12* **செ.மீ.** ; vi. *0–1–0* ; vii. சிவதீக்கை பெற்றுக்கொண்டவர் செய்யவேண்டிய பூசை விதிகள் முப்பது இதில் கூறப்பட்டுள. viii. ***118/1932/*II.**

**Q*2*:*4***

**சுவாமிநாத சிவாச்சாரியார், திருமயிலை**

***527.*** i. சிவாலய பூஜை விளக்கம் ; ii. சாது அச்சுக்கூடம், சென்னை ; iii. ***1933*** ; iv. உ.ப.+ செ.மூ.ப. ***30***; v. *16 ×11* செ. மீ ; vi. *0–4–0* ; vii. இந்நூலில் சிவாலயங்களின் அமைப்பின் நுட்பங்களும், அதன் கண் அடங்கியுள்ள தத்துவங்களும், பூசை விளக்கங்களும் கூறப்பட்டுள்ளன. ஆங்காங்கே திருமுறைப் பாடல்கள் மேற்கோளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. viii. ***659/1934/*I.**

**Q*2*:*4***

**சோமசம்பு சிவாசாரியர்**

***528.*** i. சோமசம்பு பத்ததி ; ii. சிவாகம சங்கம், தேவ கோட்டை; ஸ்ரீகோமளாம்பா அச்சுக்கூடம், கும்பகோணம்; iii. ***1934*** ; iv. செ.மூ.உ.ப. ***348*** ; v. *22 ×14* செ. மீ ; vi. *2–8–0* ; vii. இதனுள் நித்தியம், நைமித்தியம், காமியம் என்னும் மூன்று விதிகள் உள்ளன. இதன் கண் *1,860* பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு பாடலும் ஒரு சூத்திரமாக அமைந்து பல்வேறு செய்திகளை விளக்கு கின்றது. இந்நூல் *1,180* ஆண்டுகளுக்கு முன் வட மொழியில் எழுதப்பட்டதாகும். தமிழாக்கம் உரைநடை யில் செய்யப்பட்டுள்ளது. மேலும் அசிந்திய, விசுவ சாதாக்கியம் சித்தாந்த சேகரம் முதலிய நூல்களிலுள்ள செய்திகள் ஆங்காங்கே அடிக்குறிப்பாகத் தரப்பட் டுள்ளன. viii. *21/1934/*II.

**Q*2*:*4***

**சோமசுந்தர சுவாமி, கருணை பழையனூர்**

***529.*** i. ஸ்ரீகுரு தெரிசனமாலை ; ii. கருணாநிதி (பில்டிங்ஸ்) பிரஸ், திருவாரூர் ; iii. ***1933*** ; iv. செ.மூ.எ. ***11*** ; v. *18 ×12* செ. மீ ; vi. ........ ; vii. சிக்கலைச் சேர்ந்த சங்கமங்கலம் பழையனூர் மடாலயத்தில் தரிசனந் தந்த கருணையானந்த குருவின் மீது, அவருடைய சீடர்களில் ஒருவர் பாடிய தோத்திரப் பாகளை இதிலடங்கியுள. viii. ***461/1938/*II.**

**Q*2*:*4***

**தயானந்த சரஸ்வதி மகரிஷி ஸ்வாமி**

**530.** i. சமஸ்காரவிதி ; பண்டிட் கே. ஞானி, சென்னை ; ii. ஹிந்தி பிரசார் பிரஸ், திருவல்லிக்கேணி ; iii. *1934* ; iv. செ.மூ.உ.ப. *360* ; v. *18×12* செ. மீ ; vi. *1—0—0*; vii. இந்நூலில் இந்து சமயத்தைச் சேர்ந்தவர் செய்ய வேண்டிய சடங்குகளின் விளக்கங்களும், முறைகளும், சொல்லவேண்டிய மந்திரங்களும் நன்கு கூறப்பட்டுள்ளன. viii. *1332/1934/II.*

Q2:4

**531.** i. திருப்பாடல் திரட்டு : ii. இந்து மாதர் சங்கம், சிவகாசி ; சைவப்பிரகாச அச்சியந்திர சாலை, தூத்துக்குடி ; iii. *1934* ; iv. செ. மூ. ப. *22* ; v. *18×12* செ. மீ.; vi. *0—2—0* ; vii. பல்வேறு தெய்வங்களின்மீது இயற்றப்பட்ட துதிப்பாடல்கள் இந்நூலில் அடங்கியுள்ளன. viii. *1417/1934/IV.*

Q2:4

**532.** i. தோத்திரமாலை ; ii. வெ. மு. முத்து ஆச்சாரி (தென்னாப்பிரிக்கா டர்பான்) : தமிழ்நாடு பிரஸ், சென்னை ; iii. *1931* ; iv. உ. ப. + செ. மூ. ப. *17* ; v. *17×12* செ.மீ.; vi. *0—2—0* ; vii. இதில் *16* பிரார்த்தனைகள் அடங்கியுள்ளன. இவை பாடலாயும், உரைநடையாயும் அமைந்தவையாகும். viii. *166/1931/II.*

Q2:4

**533.** i. த்ரிகால யஜுர்வேத ஶ்ரீ வைஷ்ணவ ஸந்தியா வந்தநம் ; ii. டி. எம். ரகுநாதாசாரியார், திருநீர்மலை ; பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. *1933* ; iv. உ. ப. *32* ; v. *12×9* செ. மீ.; *0—1—0* ; vii. இந்நூலில் காலையிலும், பிற்பகலிலும், மாலையிலும் செய்யப்படவேண்டிய சந்தியாவந்தனங்களின் முறைகளையும், சொல்லப்படவேண்டிய மந்திரங்களையும் வடமொழியில் இருந்து தமிழில் மொழி பெயர்த்துத் தந்துள்ளார். viii. *514/1934/I.*

Q2:4

**நடராஜம் பிள்ளை, ஒ.**

**534.** i. இராமலிங்க வள்ளலார் புகழ்ப் பாமாலை ; ii. சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தார், சென்னை ; மாடல் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. *1931*, iv: செ. மூ.ப, *52*; v. *21 × 14* செ.மீ.; vi. *0—4—0*; vii. இதில் இராமலிங்க

சுவாமிகள் மீது பாடப்பெற்ற பாடல்கள் அடங்கியுள. இப்பாடல்கள் பலவகை மெட்டுகளில் அமைந்துள. பலரின் சாற்றுக் கவிகளுடன் கூடியது. வள்ளலாரின் படத்துடனும் ஆக்கியோன் படத்துடனுங் கூடியது. viii. *1125/1931*/**IV.**

**Q2:4**

**நந்தீஸ்வரர்**

i. நந்தீஸ்வரர் பூஜாவிதி-12 (பார்க்க பெரிய ஞானக் கோவை); ii. அ. இரங்கசாமி முதலியார் சன்ஸ், சென்னை; பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. *1933* ; iv. செ. மூ. எ. *12* ; v. ............. : vi. ............. ; vii. இப்பகுதியில் விநயகர், ஷண்முகன், சிவன், சக்தி, விஷ்ணு, ரேசகம், பூரகம், கும்பகம், சூரியன் ,சந்திரன், சனி ஆகியோரைப் பூசிக்கும் முறைகளும், மந்திரங்களும் கூறப்பட்டுள்ளன. *12* விருத்தப் பாக்கள் அடங்கியுள்ளன. viii. ***519/1934*/I.**

**Q2:4**

**நாகலிங்க முதலியார், அ.மு., உடையார்பாளையம்**

***535.*** i. தோத்திரப் பதிகமும் பல வர்ணமெட்டுகளும் ; ii. கேசவ விலாஸ் பிரஸ், ஜெயங்கொண்டம் : iii. *1932* ; iv. செ. மூ. ப. *8* ; v, *22* × *14* செ. மீ.; vi. ...... ; vii. உடையார்பாளையந் தாலூகா, கல்லாத்தூர் நீராழிக் கரையின்மேல் வீற்றிராநின்ற பிணிதீர்க்குங் கணநாதரைப் புகழ்ந்து பாடும் தோத்திரப் பாக்கள் அடங்கிய நூல். viii. ***157/1932*/IV.**

**Q2:4**

***536.*** i. பாரதசமாஜ நித்யபூஜா விதானம் : ii. ஜெகம் அண்டு கோ, திருச்சிராப்பள்ளி ; டாட்சன் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. *1932* ; iv. உ. ப. *28* ; v. *18* ×*12* செ. மீ.; vi. *0—4—0* ; vii. இந்நூலில், பாரத ஸமாஜ பூசையின் நோக்கங்களும், செய்ய வேண்டிய முறைகளும், கிடைக்கும் பலன்களும், பூசைக் காலத்தில் சொல்லப்பட வேண்டிய காயத்திரி செபம் முதலிய மந்திரங்களும் குறிக்கப்பட்டிருக்கின்றன. எல்லாச் சமயத்தாரும் சேர்ந்து உலகு உய்யும் பொருட்டுச் செய்யும் பூசையாகும். viii. *846/1932*/**IV.**

**Q2:4**

**பாலசுப்ரமணியக் கவிராயன், மு.**

**537.** i குட்டைக்காரச் சுவாமிகளென்னும் ஸ்ரீ இராமலிங்க மௌன மூர்த்திகளின் சரித்திரமும் தோத்திரப் பாமாலையும் ; ii. ............ ; கேசவ விலாஸ் பிரஸ், ஜெயங்கொண்டம் ; iii. *1932* ; iv. செ. மூ. எ. *9* ; v. *22×14* செ. மீ.; vi. *22×14* செ. மீ. : vii. 4 முதல் 7 முடிய உள்ள பக்கங்கள் காணப்படவில்லை. இராமலிங்க மௌன மூர்த்திகள் மீது பாடப்பட்ட தோத்திரப்பாக்கள் *8, 9, 10* ஆம் பக்கங்களில் உள்ளன. வரலாற்றைக்கூறும் பகுதி முழுவதுமில்லை: viii. *159/1932/*IV.

**Q2:4**

**மகாதேவ அய்யர், கே., மதுரை**

**538.** i. *ஸ்ரீ பிர்மா விஷ்ணு நவக்கிரக சிவத்தியானம்* ; ii. சி. எம். வி. பிரஸ், மதுரை ; iii. *1933* ; iv, உ. ப. *81* ; v. *21×14* செ.மீ.; vi. *0—6—0* ; vii. இதில் பல தெய்வங்களின் தியானம் பற்றிய செய்திகள் அடங்கியுள. viii. *1471/1933/*I.

**Q2:4**

**மஹாதேசிகன் (திருக்குடந்தை)**

**539.** i. *திருவாராதனக்ரமம் (மூன்றும் பதிப்பு)* ; ii. பட்டாபிராமன் கம்பெனி, சென்னை ; பூமகள் விலாசம் பிரஸ், சென்னை ; iii. *1935* ; iv. செ. மூ. ப. *30* ; v. *18 ×10* செ, மீ.; vi. *0—3—0* ; vii. இறைவனுக்குச் செய்யும் பூசைமுறைகள் வடமொழியில் மகாதேசிகனால் செய்யப்பட்டதை, திரு. ரங்கநாத தாதாசாரியார் அவர்கள் தமிழில் மொழிபெயர்த்து உள்ளார். viii. *253/1935/*III.

**Q2:4**

**முரஹரிதாஸ் கானம்ருதகான**

**540.** i. *ஸ்ரீ சொர்ணலிங்கேசர் ஸ்தோத்திர நவரத்ன விருத்தம்*: ii. சுப்பிரமணிய விலாச அச்சுக்கூடம், சாத்தூர் ; iii. *1930* ; iv. செ. மூ. ப. *7* ; v. *11×10* செ. மீ.; vi. ............ ; vii. சொர்ணலிங்கேசராம் சிவனை போற்றிப் பாடப்பட்ட பக்திப் பாடல்கள் அடங்கிய நூல் இது. இதன்கண் 9 விருத்தப் பாக்களும் 3 வெண்பாக்களும் அடங்கியுள்ளன. viii. *252/1931/*I.

**Q2:4**

**முனிசாமி நாயுடு, ஆ.**

**541.** i. ஸ்தோத்திர மஞ்சரி (முதற் பதிப்பு); ii. ஸ்டான்லி பிரஸ், சென்னை; iii. *1932*; iv. செ. மூ. ப. *14*; v. *21 × 14* செ. மீ.; vi. *0—1—0*; vii. இந்நூலில் " பிரார்த்தனைக் காலங்களில் பாராயணம் செய்தவற்கேற்ற தோத்திரங்கள் அடங்கியுள்ளன. இதன் கண் விநாயகர், விஷ்ணு, சிவன், லட்சுமி, நரசிம்மன், ஆஞ்சநேயர், சுப்பிரமணியன் ஆகிய தெய்வங்களின் தோத்திரங்கள் பல்வேறு மொழிகளில் அடங்கியுள்ளன. viii. *1422/1932/I*.

**Q2:4**

**மூர்த்தி, கே. எஸ். வி.**

**542.** i. நவக்கிரஹ ஸ்தோத்திரம்; ii. எம். வடிவேலு முதலியார், சென்னை; மார்கண்டன் பிரஸ், சென்னை, iii. *1934*; iv. செ. மூ. ப. *103*, v. *12 × 9* செ. மீ.; vi. *0—4—0*; vii. இந்நூலில் நவக்கிரகங்களின் தன்மை, அவைகளின் அம்சங்கள், அவைகளை, வழிபடும் முறைகள் முதலியன விளக்கப்பட்டுள்ளன. மேலும், வழிபடுங் காலங்களில் சொல்லவேண்டிய ஒன்பது கோள்களுக்குரிய தோத்திரப் பாக்களும், *108* நாமாவளிகளும், கவசங்களும் தரப்பட்டுள்ளன. இந்நூலின் இறுதியில் சனி பகவான் மீது புனையப்பெற்ற *11* தோத்திரப் பாக்கள் தரப்பட்டுள்ளன. டி. எஸ். பி. சாரதி பரிசோதித்துத் தந்துள்ளார். viii. *1346/1935/II*.

**Q2:4**

**543.** i. யஜூர் உபாகர்மம் (முதல் பதிப்பு): ii. ஜெனரல் டிரேடிங் கம்பெனி, சென்னை; iii. *1932*; iv. உ. ப. *32*; v. *12 × 9* செ. மீ.; vi. *0—2—0*; vii. யஜூர்வேத வேதியர்கள் செய்யும் சடங்கின்போது சொல்லப்பட வேண்டிய மந்திரங்களையும், செய்யப்பட வேண்டிய முறைகளையும் இந்நூல் கூறுகிறது. இதன்கண் ஸமிதாதானம், காமோகார் ஷீத்ஜபம், காயத்திரி ஜபஸங்கம், உபாகர்மம், யக்ஞோபவீத தாரணம், காண்டரிஷி தர்பணம், அத்யயனாரம்பம் ஆகியவை அடங்கியுள்ளன. viii. *633/1932/III*

**Q2:4**

**544.** i. யஜூர் உபாகர்மம் (2-ம் பதிப்பு); ii. ஜெனரல் டிரேடிங் கம்பெனி, சென்னை; எச். பி. பிரஸ், சென்னை; iii. *1934*; iv. உ. ப. *32*; v. *12 × 9* செ. மீ.; vi. *0—2—0*; vii. ........; viii. *270/1934/I*.

**Q2:4**

கணபதி நாயுடு, எம். எஸ். கோவிற் பட்டி

651. i. மலையாளம் ஜோகிசெட்டி சுவாமிகள் மீது தோத்திரப் பாடல்கள் ; ii. ஆர். எஸ். சுந்தரம் பிரதர்ஸ் கோவில்பட்டி; iii. 1931 ; iv. செ. மூ. ப.8 ; v. 17 × 10 செ.மீ. ; vi. 0—0—6 ; vii. இது, அலங்கார நல்லூர் பக்கம், முல்லையாற்றங்கரை வாலிடை மருதூர் பூலாம்பட்டியில் திருக்கோயில் கொண்ட மலையாளம் ஜோகிசெட்டி சுவாமிகள் மீது பாடப்பட்ட பாடல்கள் அடங்கிய நூல். இதில் கண்ணிகள் கும்மி, கீர்த்தனை ஆகிய பாக்கள் உள. viii. 145/1931/II.

Q26:417

கணபதிப் புலவர், கவிபூஷணம்

652. i. கணேசர் திருப்புகழ் ; ii. ஸ்ரீ கணநாயகர் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1933 ; iv. செ. மூ. எ. 100 ; v. 18 × 12 செ. மீ ; vi. 0—4—0 ; vii. இந்நூலில் கணபதியின் மீது புனையப்பட 100 பாடல்கள் அடங்கியுள்ளன. இப்பாடல்கள் வண்ணச்சந்தக் குழிப்புகளில் பாடப் பெற்றுள்ளன. viii. 1436/1934/I.

Q24:417

கந்தசாமி சுவாமிகள்

i. விநாயகர் தோத்திரப் பதிகம்— (குன்னத்தூர் புதூர் தோத்திரத் திரட்டு பார்க்க); ii. ..........; iii. ..........; iv. உ. ப. + செ. மூ. ப. 13; v. ..............; vi. ..........; vii. இதில் குன்னத்தூர் புதூர் விநாயகக் கடவுள்மீது பாடப்பட்ட எண்சீர், விருத்தப் பாடல்கள் அடங்கியுள. பதிகம் பத்துப் பாடல்களில் வருமெனினும் இதில் பதின்மூன்று பாடல்கள் வந்துள்ளமை சிந்திக்கத்தக்கது. காப்பு வெண்பா ஒன்றும் முதற்கண் உள்ளது. இறுதியில் சந்தக் கவியொன்றும் உள்ளது. viii. 1541/1931/IV.
Q26: 417

கந்தசாமி சுவாமிகள், ஸ்ரீமத் & செந்திநாயகம் பிள்ளை, தி. மு. & முருகதாசப் பிள்ளை, செ.

653. i. குன்னத்தூர் புதூர் தோத்திரத் திரட்டு ; ii. இராமாநுஜ பக்த சபை, குன்னத்தூர் புதூர் ; கேசரி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1931 ; iv. உ. ப. +

செ. மூ. ப. 30 ; v. 18 × 12 செ. மீ ; vi. ........; vii. இதில் நான்கு தோத்திரப் பதிகங்கள் அடங்கியுள. பல சந்தப் பாக்களையும் இடையிடை காணலாம். இவை சிரவை, மாதை கௌமார மடாலயம் அடியவர் மூவரால் இயற்றப்பட்டவை. viiii. 1541/1931/IV.

Q26:417

654. i. தண்டபாணி மூர்த்தியின் தோத்திரப் பதிகங்கள் ; ii. கேசரி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1933 ; iv. உ. ப.+செ.மூ. ப. 42 ; v. 19 × 13 செ. மீ ; vi. ; vii. இது சிரவணபுரம் இராமானந்த சுவாமிகள் மீது பாடப் பெற்ற பாக்களை உடைய நூலாகும். இந்நூலில் கந்தசாமி சுவாமிகள் இயற்றிய எண்சீர் விருத்தங்கள் 12ம், சந்தக் கவிகள் பலவும், தோத்திரப் பதிகம் எனும் தலைப்பில் எழுசீர் விருத்தப் பாக்கள் 12ம், கும்பாபிஷேக வைபவ வாழ்த்துப் பதிகம் எனும் தலைப்பில் 13 கலித் தாழிசைப் பாக்களும் அடங்கியுள்ளன. மேலும், செந்திணயகம் பிள்ளை அவர்களும், முருகதாசப் பிள்ளை அவர்களும் இயற்றிய பாக்களும் அடங்கியுள்ளன. viii. 1503/1933/IV.

Q26:417

655. i. பக்தி விசேடத் திரட்டு– (இரண்டு பாகங்கள்) ; ii. கேசரி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1931 ; iv. செ. மூ. எ. 117 ; v. 18 × 12 செ. மீ. ; vi. 0–6 0 ; vii. கோயமுத்தூருக்கு அடுத்த சிரவணபுரம் கௌமார மடாலயத்தின் நிறுவனர் இராமானந்த சுவாமிகள் தம் மாணவரான கந்தசாமி சுவாமிகளைக் கொண்டு ''பக்த மான்மியம்'' என்ற 7371 செய்யுட்களையுடைய பெருங்காவியத்தை எழுதுவித்தனர். அதிலிருந்து 177 பக்திப் பாடல்களும், வண்ணச்சரபம் திருப்புகழ்ச் சாமிகளென்றும் முருகதாச சுவாமிகளென்றும் வழங்கப் பெறும் தண்டபாணி சுவாமிகள் இயற்றிய கௌமார முறைமை, சிறப்புநூல், திருவெண்பா, சத்திய சூத்திரம், புலவர் புராணம் ஆகிய நூல்களிலிருந்து 140 பாடல்களும் இந்நூலிற் கொடுக்கப்பட்டுள. ஸ்ரீலஸ்ரீ இராமானந்த சுவாமிகளின் படத்துடன் கூடியது. viii. 491/1932/I.

Q26:417

ணசுந்தர முதலியார், திரு. வி.

i. முருகன் அருள் வேட்டல்; ii. பாலன் ப்திப்புக் கழகம், சென்னை; சாது அச்சுக்கூடம், சென்னை; iii. 1932; iv. செ. மூ. ப. 55; v. 18 × 12 செ. மீ.; vi. 0-4-0; vii. முருகன் அருளை விரும்பிப் பாடிய பாடல்கள் அடங்கிய நூல். திருச்செந்தூர், திருப்பரங் குன்றம், பழமுதிர் சோலை, பழனி, திருவேரகம், குன்று தோருடல், கதிர்காமம், கழுகுமலை; குன்றக்குடி, சென்னி மலை, திருச்செங்கோடு, வேளூர், திருமயிலம், திருப் போரூர், இளையனூர் வேலூர், குமரக் கோட்டம், திருத் தணிகை முதலிய பதிகளில் எழுந்தருளிய முருகக் கடவுளின் மீது பாடப்பட்ட பாடல்கள் இதில் உள. இவற் றுடன் கந்தமாதனம், பொது, காத்தல் ஆகிய தலைப்பு களிலும் பாக்கள் உள. இறுதியில் குறிப்புரையும் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 515/1932/II.

Q26:417

ப வெங்கிடாசலக் கவிஞர் & கந்தசாமி வாத்தியார், எம். என்.

i. சிவசெல்வநாயகி தோத்திரத் திரட்டு; ii. ஸ்ரீ கோபால கிருஷ்ணமூர்த்தி அச்சுக்கூடம், கரூர்; iii. 1934; iv. செ. மூ. ப. 27; v. 21 × 14 செ. மீ; vi. 0—2—0; vii. கொங்கு தலைசை நாடு மணலூர் கோட்டைக் கரையில் எழுந்தருளியுள்ள செல்வநாயகிமீது புனையப்பெற்ற பல்வேறு சந்தங்களை யுடைய பாக்கள் இதன்கண் திரட்டப்பட்டுள்ளன. viii. 2451/934/II.

Q25:417

தாஸா, மஹாகவி

i. தேவீ ஸ்தோத்ர தஸகம்—(ஸ்ரீலலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி பார்க்க); ii. ......; iii. ....... ; iv. செ. மூ. எ. 10.; v. ........; vi ........; ;vii. காளிதாசர் இயற்றிய தேவியின்மீது புனையப்பெற்ற பதிகம் இப்பகுதியில் காணப்படுகிறது. 10 வடமொழிச் சுலோகங்கள் அடங்கி யுள்ளன. ஒவ்வொரு பாட்டும் 4 அடிகள் கொண்டவை. viii. 1222/1935/I.

Q25:417

வாலை ஸ்தோத்ரம்—(ஸ்ரீ லலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி பார்க்க); ii. ........; iii. ........; iv. செ. மூ. எ. 4; v. ......; vi....... ; vii இந்நூலில் தேவியின் மீது புனையப் பெற்ற தோத்திரம் அடங்கியுள்ளது. வடமொழிச் சுலோகங்கள் தமிழ்எழுத்துக்களில் அச்சிடப் பெற்றுள்ளன; viii. 1222/1935/I. Q25:417

658. i. குசார்ச்சனைத் திருமந்திரம் ; ii. சைவ சித்தாந்த மகாசமாஜம், சென்னை, சாது அச்சக்கூடம், சென்னை ; iii. *1933* ; iv. செ. மூ. ப. *30* ; v. *12×8* செ. மீ.; vi. *0–0–3* ; vii. இதில் திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரநுபூதி, திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ் சேந்தனார் திருவிசைப்பா, திருமுருகாற்றுப்படை, திருப் போரூர் சந்நிதி முறை, திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ், திருச்செந்தூர் புராணம், தணிகைப் புராணம் ஆகியவற்றி லிருந்து சில பாடல்கள் எடுத்துத் தரப்பட்டுள. இது திருக்கோவலூர் ஆதீனத்துத் திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடாலயத் தலைவர். சிவ சண்முக மெய்ஞ் ஞான சிவாசாரிய சுவாமிகள் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவின்பொழுது வழங்கப்பட்டது. viii. *1274/1933/II.*

*Q23:417*

கோடீஸ்வரர், ஸ்ரீநாராயணபுரம்

i. ஸ்ரீ பாலா த்ரிபுர சுந்தர் பஞ்ச ரத்ந ஸ்தோத்திரம் (ஸ்ரீ லலிதாம்பிகை ஸகஸ்ரநாமாவளி பார்க்க); ii. iii. ...... ; iv. செ. மூ. எ. *6* ; v....... ; vi....... ; vii. இப்பகுதியில் பாலாதிரிபுர சுந்தரியின்மீது புனையப்பெற்ற *4* அடிகளைக்கொண்ட *6* வடமொழி சுலோகங்கள் தமிழ் எழுத்துக்களில் அச்சிடப் பெற்றுள்ளன. ஒவ்வொரு பாடலின் ஈற்றடியிலும், " த்வாம் ஸாம்ப்ரதம் திரிபுர ஸௌந்தரி தேவி வந்தே" என்பது மகுடமாகக் காணப்படுகிறது. viii. *1222/1935/I.*

*Q26:417*

சக்திபாலன, ஆ யூ

659. i. ஸ்ரீ துர்க்கையம்மன் சிங்காரப் பாடல்—(முதல் பாகம்); ii. எஸ். ஆர். வி. பிரஸ், விழுப்புரம் ; iii. *1933* ; iv. செ. மூ. ப. *8* ; v. *14×11* செ. மீ. ; vi. *0–0–6* ; vii. துர்க்கையம்மன் மீது பாடப்பட்ட துதிப்பாக்கள் இதில் அடங்கி யுள்ளன. viii. *1574/1933/II.*

*Q26:417*

சங்கரலிங்கக் கவிராயர், ச. சு.

660. i. பழனியாண்டி பாட்டு ; ii. கே. ஏ. மதுரை முதலியார் ; மனோரஞ்சினி பிரஸ், சென்னை ; iii. *1932* ; iv. செ. மூ. ப. *23* ; v. *18* × *12* செ. மீ. ; vi. *0—3—0*; vii. இதில் பழனி முருகன்மீது பாடப்பட்ட இசைப் பாக்கள் பல மெட்டுகளில் அமைந்துள. viii. *556/1933/*I.

Q*26:417*

சங்கராச்சாரியார்

661. i. சியாமளா நவரத்னமாலிகா ; ii. அருணாசல சாஸ்திரிகள், நெல்லிச்சேரி ; கோபால விலாஸ பிரஸ், கும்பகோணம் ; iii. *1931* ; iv. செ. மூ. உ. ப. *22* ; v. *12* × *10* செ. மீ ; vi. *0—2—0* ; vii. வடமொழியில் அமைந்த பாக்களின் தமிழாக்கம் ஆகும். இதன்கண் சியாமள நவரத்னம், தேவி பஞ்சரத்னம், அம்பா பஞ்சரத்னம், மீனாட்சி ஸ்தோத்திரம் ஆகியவை அடங்கியுள்ளன. viii. *576/1931/*IV.

Q*25:417*

662. i. சிவாநந்தலகரி ; ii. மீனலோசனி அச்சியந்திரசாலை, மதுரை ; iii. *1932*; iv. செ. மூ. எ. *1000* ; v. *18* × *12* செ. மீ ; vi. ........ ; vii. இது மதுரை மு. கோவிந்தசாமி ஐயரால் வடமொழியிலிருந்து செய்யுளாக மொழிபெயர்க்கப் பெற்றது. சிவ பெருமானைப் போற்றிப் பாடும் நூல். திருமதி சு. ஞானம்பாள் அவர்களின் வேண்டுகோளின்படி மொழி பெயர்க்கப் பட்டது. viii. *907/1932/*II.

Q*23:417*

663. i. சிவாநந்தலஹரீ—(2ம் பதிப்பு) ; ii. ஜெனரல் டிரேடிங் கம்பெனி, சென்னை ; இந்தி பிரச்சார் பிரஸ், சென்னை ; iii. *1934* ; iv. உ. ப. *46* ; v. *12* × *9* செ. மீ ; vi. *0—2—0* ; vii. இச்சிறு நூலில் வடமொழிப் பாடல்கள் தமிழ் எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளன. இவை சிவபெருமான்மீது புனையப்பெற்ற தோத்திரப் பாக்களாகும். viii. *269/1934/*I.

Q*23:417*

664. i. சுப்பிரமணிய புஜங்க ஸ்தோத்திரம் ; ii. ; ஹரிஸமய திவாகரம் பிரஸ், மதுரை ; iii. *1934* ; iv. செ. மூ. ப. *16* ; v. *18 × 12* செ. மீ ; vi....... ; vii. வட மொழி நூலைத் தமிழில் மு. கோவிந்தசாமி ஐயர் பாடல்களாக மொழி பெயர்த்துள்ளார். viii. *1426/1934/*I.

**Q26:417**

i. மதுரை ஸ்ரீமீநாக்ஷி அஷ்டகம் (ஸ்ரீலலிதாம்பிகை ஸகஸ்ர நாமாவளி பார்க்க) ; ii..... ; iii.....; iv. செ. மூ. எ. 6 ; v.....; vi....... ; vii. ;இதனுள் மதுரை மீனாட்சி அம்மன் மீது புனையப்பெற்ற 8 வட மொழிச் சுலோகங்கள் தமிழ் எழுத்துக்களில் காணப்படு கின்றன. ஒவ்வொரு பாடலின் ஈற்றடியிலும் 'மாம் பாஹ மீநாம்பிகே' என்ற சீர்கள் காணப்படுகின்றன. viii. *1222/1935/*I.

**Q25:417**

i. ஸ்யாமளா நவரத்னமாலிகை—(ஸ்ரீலலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி பார்க்க); ii. ....; iii. ....; iv. செ. மூ. எ. *12* ; v.....; vi.....; vii.....; பார்வதி தேவியின் மீது புனையப்பெற்ற *12* பாடல்களைக் கொண்டது. வடமொழிச் சுலோகங்கள் தமிழ் எழுத்துக்களில் அச்சிடப்பெற்றுள்ளன. viii. *1222/1935/*I.

**Q25:417**

i. ஸ்ரீ அந்தபூர்ணாஷ்டகம்—(ஸ்ரீலலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி பார்க்க); ii; ....;iii. ....;iv. செ.மூ. எ. *12* ; v.....; vi. ....; vii. பார்வதி தேவியின் மீது புனையப்பெற்ற "மாதாந்திர பூர்ணேஸ்வரீ" என்ற தொடர் ஈற்றில் அமைந்த *4* அடிகள் கொண்ட *9* சுலோகங்கள் காணப்படுகின்றன. *10*வது சுலோகத்தில் *3* அடிகளும், *11*, *12*-வது சுலோகங்களில் இரண்டடிகளும் உள்ளன. viii. *1222/1935/*I.

**Q25:417**

i. ஸ்ரீ இராஜராஜேஸ்வரி மந்தராக்ஷீர மாலிகா ஸ்தோத்ரம்—(ஸ்ரீலலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி பார்க்க); ii ....; iii....;iv. செ. மூ. எ. 15 +1; v. ....; vi ....; vii. இப்பகுதியில் இராஜராஜேஸ்வரியம்மன்மீது புனையப்பட்ட 15 பாடல்கள் காணப்படுகின்றன. ஒவ்வொரு பாடலும் நான்கடிகளாலானவை. "ஸ்ரீஸக்ரப்பிரிய விந்துதற்பணராம் ஸ்ரீராஜ ராஜேஸ்வரி", என்ற வரி எல்லாப் பாடல்களிலும் ஈற்றடியாக அமைந்துள்ளது. viii. *1222/1935/*I.

**Q25:417**

i. ஸ்ரீத்ரிபுரஸௌந்தரி ஸ்தோத்ரம்—(ஸ்ரீலலிதாம்பிகை ஸகஸ்ரநாமாவளி பார்க்க); ii. ..; iii. .. iv.செ. மூ. எ. 8 ;v......... ; vi. ........; vii. பார்வதியம்மன் மீது புனையப்பெற்ற 8 சுலோகங்கள் இப்பகுதியில் அடங்கியுள்ளன. தமிழ் எழுத்துக்களில் வடமொழிச் சுலோகங்கள் தரப்பெற்றுள்ளன. viii. *1222/1935/*I.

**Q25:417**

சபாபதி பிள்ளை, வித்வான், தஞ்சாவூர்

i. திரிபுரசுந்தரியம்மன் துதி. ஸ்ரீசங்கர விஜய சிந்தாமணி பார்க்க); ii....; iii....; iv. செ. மூ. எ. 10 ; v. ....; vi. .... ; vii. இப்பகுதியில் திரிபுரசுந்தரியம்மன்மீது புனையப் பெற்ற 10 பாடல்கள் காணப்படுகின்றன. ஒவ்வொரு பாடலும் 'போற்றி' என்று முடிவுறுகின்றது. viii. *1291/1933/*III.

**Q25:417**

சிவ ஞானதேசிக சுவாமிகள்

665. 1. புள்ளிருக்கு வேளூர் முத்துக்குமாரசுவாமி திருவருட்பா ; டாக்டர் கே. வெங்கடாச்சாரியார் ; கும்பகோணம்; ii. யதார்த்தவசனி அச்சுக்கூடம் ; iii. *1931* ; iv. செ.மூ. எ. *10* ; v. $14 \times 11$ செ. மீ ; vi. vii. ஆசிரிய விருத்தத்தால் அமைந்த பாடல்கள் இதன்கண் அமைந்துள்ளன. இது ஓர் இலவச வெளியீடாகும். viii. *1268/1931/*II.

**Q26:417**

666. i. சிவதோத்திர மஞ்சரி—(2ம் பதிப்பு); ii. திருவலியாரிஷபவாகன மஹோற்சவ அன்னதான சபை, சென்னை; பாரதி பிரஸ், சென்னை ; iii. 1933 ; iv. செ.மூ.ப. 132 ; v. 13 ×11 செ. மீ ; vi. 0–4–0 ; vii. இதில் விநாயகர் தோத்திரம், சுப்பிரமணியர் தோத்திரம், திருப்புகழ், மயில்பாட்டு, திருப்போரூர் சந்நிதிமுறை, தேவாரச் சிறப்பு, தேவாரப் பதிகங்கள், திருவாசகம், திருமூலர் திருமந்திரம், திருவிளையாடற் புராணம், பட்டினத்துப் பிள்ளையார் பாடல், தாயுமான சுவாமிகள் பாடல், இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா, பார்வதியம்மையார் தோத்திரம், திருநந்தி தேவர் தோத்திரம், சண்டேசுவர நாயனார் தோத்திரம், அறுபத்து மூவர் தோத்திரம், சேக்கிழார் சுவாமிகள் தோத்திரம் ஆகிய பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. viii. 482/1933/II.

Q23:417

i. சிவ நாமாவளி திரட்டு—(பெரிய ஞானக் கோவை பார்க்க) ; ii. அ. இரங்கசாமி முதலியார் சன்ஸ், சென்னை; பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1933 ; iv. செ. மூ. ப. 601-636 ; v. .... ; vi. ..... ; vii. இப்பகுதியில் இராமலிங்க அடிகள் இயற்றியருளிய சில நாமாவளியும் (அம்பலத்தரசே அரு மருந்தே) அருள் விளக்க மாலை, முறையீடு, ஆனந்த மேலீடு, வேட்கைக் கொத்து, சிவ தரிசனம், பிரியேனென்றல் என்ற ஒரு துறைக் கோவை, வாதனைக் கிரங்கல், ஆனந்தக் களிப்பு, மெய்யருள் விருப்புமாலை, திருவருள் விலாசப் பத்து, பாங்கியர்க்கு அறிவுறுத்தல், வெண்ணிலா முதலிய பாடல்களும் தொகுத்துத் தரப்பட்டுள்ளன ; viii. 519/934/I.

Q23:417

சிவப்ரகாச குமரகுரு தேசிகர், மதுரகவி,

667. i. ஸ்ரீ கபாலீஸ்வரரரின் சிவஞானச் சிகாமணி ; ii. ; ஸ்ரீ ஜெய விநாயக சிவப்பிரகாச அச்சுக் கூடம், சென்னை ; iii. 1935 ; iv. செ.மூ.ப. 49 ; v. 22 ×14 செ.மீ. ; vi .... ; vii. இந் நூல் சைவ சமயப் பேருண்மைகளை விளக்குவது. பல்வேறு வகையான பாடல்கள் காணப்படுகின்றன ; viii. 446/1935/II.

Q23:417

668. i. ஸ்ரீகபாலீஸ்வரரின் சிவஞானத் திங்களொளி ; ii. ஸ்ரீஜெய விநாயக சிவப்பிரகாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1932 ; iv. செ.மூ.ப. 24 ; v. 21 × 14 செ. மீ. ; vi............. ; vii. இதில் சிவோபதேசமாலை, தனி விருத்தங்கள், பல துதிப்பாக்கள், சிவப் பிரகாச தேசிகமாலை, நாயகமாலை, காருண்யமாலை, தற்பரமாலை, நமச்சிவாயமாலை, போற்றித் தேவாரம் ஆகியன அடங்கியுள. இவை தோத்திரப் பாக்களாகும்.

viii. 1087/1932/II.

Q23:417

669. i. ஸ்ரீகபாலீஸ்வரரின் சிவஞானத்திமிதம் ; ii. ஜெயவிநாயக சிவப் பிரகாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1934 ; iv. செ. மூ. ப. 28 ; v. 21 × 14 செ.மீ. ; vi............. ; vii. இந் நூலில் சிவப் பிரகாச சுவாமிகள் அருளிய கணபதி துதியும், ஆனந்தக் களிப்பில் 48 விருத்தங்களும், தியான மஞ்சரியில் கீர்த் தனைகளும் அடங்கியுள்ளன ; மேலும், சிவப்பிரகாச தேசிக சுவாமிகளின் புத்திரரான சிவப்பிரகாச குமரகுரு தேசிகரால் இயற்றப்பட்ட விநயகர் துதியும், வேறுபல துதிப்பாடல்களும், நூல் முதற் பகுதியில் காணப்படு கின்றன ; சிவப்பிரகாச தேசிக மாலையில் எழுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தப் பாக்கள் பதினொன்றும், சிவா னந்த மாட்சிமாலை, தீஞ்சுவை மாலை, தாரக மந்திரமாலை, தயை வேண்டுமாலை ஆகிய மாலைகள் ஒவ்வொன்றிலும் 10 பாடல்களும் அடங்கியுள்ளன ; viii. 1181/1934/II.

Q23:417

i. சிவாநந்த போதம் (பெரிய ஞானக் கோவை பார்க்க); ii. அ. இரங்கசாமி முதலியார் சன்ஸ், சென்னை ; பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1933 ; iv. செ.மூ. எ. 100 ; v........... ; vi............. ; vii. இப்பகுதியில் அறிவுக்கும் மனத்திற்கும் உரையாடல் நிகழ்கின்றது. அறிவு பாடல்களின் வாயிலாக அறிவுரை கூற, மனம் உரைநடையில் விளக்கங்களும் ஐயங்களும் கேட்டுத் தெளிவு பெறுகிறது. தத்துவ விளக்கங்கள் அடங்கியுள்ளன. ஒவ்வொருவரும் படித்தறிய வேண்டிய நூலாகும் இது ; viii. 519/1934/I.

Q23:417

சிவானந்த சுவாமி, ஸ்ரீகாசிவாசி

670. i. பாரூர் இரட்டை விநாயகர் தண்டபாணிக் கடவுளின் தோத்திரப் பாமாலை ; ii. வி. அப்பாச்சாமி முதலியார் பாரூர் ; சஞ்சீவி பிரஸ், தர்மபுரி ; iii. 1932 ;

iv. செ.மூ.ப. 47 ; v. 18× 12 செ.மீ. ; vi.........; vii. இந் நூலில் பாரூரில் எழுந்தருளியுள்ள இரட்டை விநாயகர் சோடச கலைத் தோத்திரப் பாமாலையும், தண்ட பாணிக் கடவுள் துவாத சாதித்த தோத்திரப் பாமாலையும் அடங்கியுள்ளன ; இறுதியில் நாமாவளியும் இணைக்கப்பட்டுள்ளது ; viii. 448/1932/III.

Q24:417

சுப்பராய சுவாமிகள், தி. அ. (மொ.து.)

i. காயத்தீ ஹறுதயம்-(ஸ்ரீலலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி பார்க்க) ; ii...........; iii...........; iv. செ.மூ.எ. 1 ; v.............; vi...........; vii. இப்பகுதியில் முதற்கண் காயத்ரீ மந்திரம் தரப்பட்டுள்ளது. பின்னர் நாரதர் வாக்கியம், நாராயணர் வாக்கியம், காயத்ரீ இருதயம் என்ற தலைப்புகளில், பாடல்கள் காணப்படுகின்றன. வடமொழிப் பாடல்கள் தமிழ் எழுத்துக்களில் தரப்பட்டுள்ளன ; viii. 1222/1935/I.

Q25:417

i. ஸ்ரீநவசக்தி தியாநம் (ஸ்ரீலலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி பார்க்க) ; ii. ..........; iii.......; iv. செ.மூ.எ. 108 ; v...........; vi.........; vii. இதன்கண் ஒன்பது வடமொழிச் சுலோகங்கள் தமிழ் எழுத்துக்களில் காணப்படுகின்றன ; viii. 1222/1935/I.

Q25:417

i. ஸ்ரீ ராஜராஜேஸ்வரி அஷ்டகம் (ஸ்ரீலலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி பார்க்க) ; ii.........; iii.......; iv. செ.மூ.எ. 8 ; v...........; vi...........; vii. இதன்கண் இராஜராஜேஸ்வரி அம்பிகைமீது புனையப் பெற்ற 8 சுலோகங்கள் அடங்கியுள்ளன ; viii. 1222/1935/I.

Q25:417

i. ஸ்ரீலலிதாம்பிகா திரிஸதி நாமாவளி (ஸ்ரீலலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி பார்க்க) ; ii..........; iii. ............; iv. செ.மூ.எ. 300 ; v..........; vi. .............; vii. இதனுள் லலிதாம்பிகையின் மீது புனையப் பெற்ற நாமாவளி அடங்கியுள்ளது. 300 வரிகள் காணப்படுகின்றன ; இதனை இயற்றியவர் இன்னாரென அறிய முடியவில்லை ; viii. 1222/1935/I.

Q25:417

i. ஸ்ரீ லலிதாம்பிகா த்ரிஸதி நாமஸ்தோத்ரம் அகஸ்தியர் வாக்யம் (ஸ்ரீ லலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி பார்க்க); ii..........; iii..........; iv. செ.மூ.எ. *28+118* ; v. ..........; vi. ..........; vii. இப்பகுதி லலிதா ஸஹஸ்ர நாமாவளி தோத்திரம் எனும் திரட்டு நூலின் இரண்டாம் பகுதியாகும். லலிதாம்பிகா த்ரிஸதி நாம ஸ்தோத்திரம் எனும் பகுதியில் முதற்கண் அகத்தியர் வாக்கியம் 9 சுலோகங்களும், தேவி வாக்கியம் 9 சுலோகங்களும் ஹயக்ரீவர் 9 சுலோகங்களும் ஸூதர் வாக்கியம் ஒரு சுலோகமும் உள்ளன. மேலும் 118 சுலோகங்களைக் கொண்ட தோத்திரமும் அடங்கியுள்ளது. வடமொழிச் சுலோகங்கள் தமிழ் எழுத்துக்களில் அச்சிடப்பெற்றுள்ளன. viii. *1222/1935/* I.

**Q25:417**

i. ஸ்ரீ லலிதாம்பிகா நவீன அஷ்டோத்தர சதநாமாவளி (ஸ்ரீலலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி பார்க்க) ii. ........; iii.........; iv. செ.மூ.எ. *1—108* ; v...........; vi..........; vii. லலிதாம்பிகையின்மீது புனையப்பெற்ற 108 நாமாவளிகள் அடங்கியுள்ளன ; viii. *1222/1935/* I.

**Q25:417**

i. ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம் (ஸ்ரீலலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி பார்க்க) ; ii. ........; iii..........; iv. செ.மூ.எ. *8+9+64* ; vii. இந்நூலின் முதற் பகுதியில் லலிதா ஸஹஸ்தர நாம ஸ்தோத்திரம் அடங்கியுள்ளது. இது மூன்று அத்தியாயங்களையுடையது. முதல்அத்தியாயத்தில் 50 சுலோகங்களும், இரண்டாவது அத்தியாயத்தில் 184 சுலோகங்களும், மூன்றாவது அத்தியாயத்தில் 86 சுலோகங்களும் அடங்கியுள்ளன. வட மொழிச் சுலோகங்கள் தமிழ் எழுத்துக்களில் அச்சிடப் பெற்றுள்ளன. viii. *1222/1935/* I.

**Q25:417**

**671.** i. ஸ்ரீலலிதாம்பிகை ஸஹஸ்ர நாமாவளி ஸ்தோத்ரம் : ii. சை. இரத்தின செட் அண்டு சன்ஸ், ஆரியன் டிராக்ட் அண்டு புத்தகசாலை, திருக்கழுக்குன்றம் ; மனோரஞ்சனி பிரஸ், சென்னை ; iii. *1935*; iv. செ.மூ.ப. *238+2*, v. *11 × 8* செ.மீ. ; 5i. *0-8-0* vii. இந்நூல்

லலிதா ஸகஸ்த்ரநாம ஸ்தோத்திரம், லலிதாம்பிகா திரிஸதிநாம ஸ்தோத்திரம், இராஜராஜேஸ்வரி அஷ்டகம், த்ரிபுரசுந்தரி ஸ்தோத்ரம், இராஜராஜேஸ்வரி மந்த்ராக்ஷர, மாலிகா ஸ்தோத்திரம், ஸ்யாமளா நவரத்ந மாலிகை, வாலை ஸ்தோத்திரம், ஸ்ரீ அந்நபூர்ணுஷ்டகம், பாலாதிரிபுரசுந்தரி பஞ்சரத்ந ஸ்தோத்திரம், தேவி ஸ்தோத்திர சதகம், மதுரை மீனுட்சி அஷ்டகம், பஞ்சரத்ந தோத்திரம், நவசக்தி தியானம், காயத்திரி இருதயம், லலிதா சகஸ்ரநாமாவளி, அஷ்டோத்திர சதநாமாவளி, லலிதாம்பிகா திரிஸதி நாமாவளி முதலிய நூல்கள் அடங்கியுள்ளன. இதனைப் பரிசோதித்தவர் பண்டிட் சை. ர. நமசிவாய ராஜயோகியாவர். இதன் முகப்பில் தேவி 40 முக்கோணச் சக்கரமும், பஞ்சாட்சரச் சக்கரமும் காணப்படுகின்றன ; viii. *122/1935/* I.

**Q25:417**

சுப்புலக்ஷ்மி, ஆர். எஸ்.

**672.** i. *ஸ்ரீலலிதாம்பாள் சோபனம்* ; ii.........; iii. *1933* ; iv. செ.மூ.ப. *74* ; v. *22 ×14* செ.மீ. ; vi.........; vii. இந் நூலில் பரதேவதை எடுத்த அவதாரங்களின் ஆற்றல்களை விவரிக்கும் வகையில் பாடல்கள் அமைந்துள்ளன. மேலும், மகாவிஷ்ணு எடுத்த அவதாரங்கள் சில தேவியினுடையதாகவே கூறப்பட்டுள்ளன. இப் பாடல்கள் மலையாள மொழியில் வாய்மொழியாகவே பாடப்பட்டு வந்தவற்றை ஆசிரியை நூல் வடிவில் தந்துள்ளார். மற்றும் இதனுடன் தேவி பாடம் எனும் பழைய காலத்துப் பாட்டும் இடம் பெற்றுள்ளது ; viii. *1256/1933/* I.

**Q25:417**

**673.** i. சுவாநுபவத் திருவாக்கு என்னும் பாராயண சிந்தாமணி *(4ம் பதிப்பு)* ; ii. சி. மு. சி. சின்னையா செட்டியார், புதுக்கோட்டை ; விவேகாநந்தா பிரஸ், மதுரை ; iii. *1935* ; iv. உ.ப. + செ.மூ.ப. *232* ; v. *18 ×12* செ.மீ. vi. *0–4–0* ; vii. இந் நூலில் விநாயகர் அகவல், கந்தர் கலிவெண்பா, தோத்திரப் பாக்கள், மூவர் தேவாரங்கள், சிவபுராணம், திருமந்திரம், பகவத் கீதை, குரு கீதை ஈசுவர கீதை, ஞானவாசிட்டம், விவேக சூடாமணி சொரூபசாரம், பாடுதுறை முதலியவற்றிலிருந்தும், தாயுமான சுவாமிகள், பட்டினத்தார், இராமலிங்க அடிகள் முதலியோரின் பாக்களிலிருந்தும், தேர்ந்தெடுக்கப்பெற்ற பாராயண பாக்களும், அர்ச்சனை நாமாவளிகளும் அடங்கியுள்ளன. மேலும், சுபாநுபவத் திருவாக்கு என்ற நூலின் முழுமையும் இணைக்கப் பெற்றிருக்கின்றது ; viii. *728/1935/*IV.

**Q2 3:4**

செல்லச்சாமி, மீ. பொ., மதுரை (தொ. து).

674. i. வள்ளி சுப்பிரமணியர் தர்க்கம் (இரண்டாம் பாகம்) ii. ஸ்ரீ கிருஷ்ணு பிரஸ், மதுரை ; iii. 1932 ; iv. செ.மூ.ப. 8 ; v. 21 × 14 ; செ.மீ. ; vi. ........; vii. இது வள்ளிக்கும் முருகனுக்கும் இடையில் நடந்த உரையாடல் அடங்கிய நூல். இது ஆனந்தக் களிப்பு வர்ணமெட்டில் அமைந்தது ; viii. 22/1933/I.

Q23:417

675. i. ஞானசர நூல் (சிவஸ்வரோதயம்) ; ii. டி. எஸ். அமிர்தலிங்கம் பிள்ளை, தஞ்சாவூர் ; வாஸ 395 ; v. கூடம், தஞ்சை ; iii. 1935 ; iv. செ.மூ.எ. 395 ; v. 21 × 14 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. தத்துவ விளக்க நூல் ; viii. 71/1935/IV.

Q23:417

தங்கவேல் முதலியார், எஸ். ஆர்., செம்பியம்

676. i. முருகர் தோத்ர பூஜா பதிகமும் மெய்வர்க்க பாக்களும் ; ii. பாரதி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1934 ; iv. செ.மூ.ப. 16 ; v. 18 × 12 செ.மீ. ; vi. ........; vii. இந் நூலில் முருகப் பெருமானைக் குறை வேண்டிப் பாடிய கழிநெடிலடி ஆசிரியப் பாக்கள் 20 அடங்கியுள்ளன. ஆனால் நூலின் தலைப்பில் பதிகம் எனத் தரப்பட்டுள்ளது. மேலும் இந்நூலில், ஒரு கீர்த்தனையும், மெய் எழுத்துக்களின் வர்க்கங்களையே எதுகையாகக் கொண்டு பாடப்பெற்ற 18 பாக்களும், போற்றி விருத்தமும், மொழி விருத்தமும், காணப்படுகின்றன ; viii. 1173/1934/I.

Q26:417

677. i. தேவிகாலோத்தர ஆகமம், தமிழ் மூலம் ; ii. பொ. முத்தைய பிள்ளை, தூத்துக்குடி ; சிவநேசன் அச்சியந்திர சாலை, பலவான்குடி ; iii. 1935 ; iv. செ.மூ.உ.ப. 101; v. 23 × 14 செ.மீ. ; vi. 0-10-0 ; vii. தேவி, காலம், உத்தரமென்னும் பெயர்களின் புணர்ச்சியே தேவிகாலோத்தரம் என்பதாகும். இந் நூல் ஞானம், ஞானசாரம், என்னும் இரு பிரிவுகளையுடையது. ஞான இயலில் ஞானத்தைக் கைக்கொள்வதற்குரிய அதிகாரி இலக்கணம், பெருமை, முத்தி நெறி, சீவன் முத்தி, சீவன் முத்தர்

இயல்பு முதலியனவும், ஞானசார இயலில் ஞானசாதகன் சிவஞானத்தைத் தவிர ஏனையவற்றைப் பயிலுதல் கூடாதென்பதும் கூறப்படுகின்றன. இதன்கண் 69 விருத்தப் பாக்கள் அடங்கியுள்ளன ; viii. *353/1935*/IV.

Q25:417

**நித்தியானந்த சுவாமிகள்**

*678.* i. நால்வர் தோத்திரப்பா ; ii. கையூமி பிரஸ், பேட்டை ; iii. *1935* ; iv. செ.மூ.ப. *39* ; v. *14×11* செ.மீ. ; vi. *0-2-0* ; vii. இந் நூலில், திருவருட்சக்திமாலை எனும் பகுதியில் உமையம்மையின் மீது புனையப் பெற்ற 32 எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப் பாக்களும், பின்னர் பிரம்ம ஸ்ரீ தியானந்த ஞானதேசிக சுவாமிகளின் பதிகம், ஸ்ரீமத் பொன்னம்பல மாமுனிவர் பதிகம், ஸ்ரீமத் சிவராமலிங்க மாமுனிவர் பதிகம் ஆகியவைகளும் காணப்படுகின்றன. viii. *417/1935*/I.

Q25:417

**பிச்சை பிள்ளை, எல்.**

*679.* i. திரு. ஐயன்பேட்டை இரணபத்திர வீரமாகாளியம்மன் துதி ; ii. ச. க. கண்ணையா பிள்ளை, பரிமளா பிரஸ், மாயவரம் ; iii. *1932* ; iv. செ. மூ. எ. *41* ; v. *21×14* செ. மீ. ; vi. *0–2–0* ; vii. இரணபத்திர வீரமாகாளியைப் புகழ்ந்து துதிக்கும் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. ஆசிரிய விருத்தம், கீர்த்தனை நொண்டிச் சிந்து, கும்மி ஆகிய மெட்டுகளில் இவை எழுதப்பட்டுள ; viii. ....../ *1932*/IV.

Q25:417

**புகழ் கருப்ப நாடார், மு.**

680. i. திருநெல்வேலி ஜில்லா குரங்கனி, ஸ்ரீ முத்துமாலையம்மன் திருவிழா அலங்காரச் சிறப்பு ; ii. உண்மை விளக்கம் பிரஸ், விருதுநகர் ; iii. *1933* ; iv. ச. மூ. ப. *16* ; v. *21×14* செ.மீ. ; vi. *0-2-0* ; i. தங்கமுத்துமாலை, எங்கள் முத்து மாலை என்ற தொடர்கள் அடிதோறும் மாறிமாறிக் காணப்படுகின்றன ; viii *408/1933*/III.

Q25: 417

**பெரியண்ணஞ் செட்டியார், சா. ம.**

**681.** i. சொக்கலிங்கக் கடவுள் தோத்திரம், மீனாக்ஷியம்மன் தோத்திரம், சிவநாம சங்கீதம் (2ம் பதிப்பு) ; ii. பிரம்ம ஸ்ரீசோமலிங்கா ரா. கிருஷ்ணசாமி அய்யர், மதுரை ; சி. எம். வி. பிரஸ், மதுரை ; iii. 1934 ; iv. செ.மூ.ப. 26 ; v. 18 × 12 செ.மீ. ; vi............. ; vii. இந் நூலில் சொக்கலிங்கக் கடவுள்மீதும், மீனாட்சியம்மன் மீதும் புனையப்பெற்ற தோத்திரப் பாக்கள் அடங்கியுள்ளன. மேலும் பல்வேறு இராகங்களுடன் அமைக்கப்பெற்ற கீர்த்தனைகளும் இடம் பெற்றுள்ளன ; viii. 1260/1934/II.

Q25:417

**மங்களதாஸ், திரிசிரபுரம்**

**682.** i. பால தண்டபாணி பேரில் நவரத்தினமும், நாமாவளி, மாலை, காவடி வருகை, வேல் பாட்டுகள் ; ii. டி. எஸ். சுந்தரம் பிள்ளை, திரிசிரபுரம் ; மனோரஞ்சினி பிரஸ், சென்னை ; iii. 1932 ; iv. செ.மூ.ப. 16 ; v. 18 × 12 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. இந் நூலில் பாலதண்டபாணி சுவாமிகள் மீது பாடப்பெற்ற நவரத்தினம், மாலை, காவடி வருகை, வேல் பாட்டு ஆகிய 4 பாடல்கள் உள்ளன ; viii. 1166/1932/IV.

Q26:417

**முத்துச் சிதம்பர செட்டியார், என். கே**

**683.** i. திருக்கடவூர் அபிராமி அம்மன் தோத்திரப் பாமாலை: ii. ஸ்ரீ அம்பாள் பிரஸ், சீர்காழி ; iii. 1934 ; iv. செ.மூ.எ. 6—105 ; v. 22 × 14 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. இந் நூலில் திருக்கடவூரில் எழுந்தருளியுள்ள அபிராமி அம்மன் மீது புனையப் பெற்ற தோத்திரப் பாக்கள் அடங்கியுள்ளன. இதன்கண் 105 விருத்தங்கள் காணப்படுகின்றன. " கடேசர் வாழ் திருவபிராமி " என்ற தொடர் ஒவ்வொரு பாடலின் ஈற்றடியிலும் காணப்படுகின்றது ; viii. 167/1934/III.

Q25:417

**வரதநஞ்சைய பிள்ளை, அ., தோரமங்கலம்**

**684.** i. சைவச் சிறப்பு ; ii. சைவ சித்தாந்த சபை, தூத்துக்குடி ; சைவப் பிரகாச அச்சியந்திரசாலை ; iii. 1933 ; iv. உ.ப. 11 ; v. 22 × 14 செ.மீ. ; vi.........;

vii. இந் நூலில் சைவ சமயம், மற்ற சமயங்களின் கருத்துக்களை உள்ளடக்கி, தானே ஒரு பெருஞ் சமயமாய் விளங்குகிறது என்ற உண்மை விளக்கப்பட்டிருக்கிறது : viii. *107/1933/***IV**.

**Q23:417**

வியாச முனிவர்

**685.** i. மார்க்கண்டேய புராணத்திலுள்ள தேவி மஹாத்மியம் (மஹா மந்திர சாஸ்திரம்) ; ii. சாது அச்சுக் கூடம், சென்னை ; iii. *1932* ; iv. உ.ப. *81* ; v. *18 × 12* செ.மீ. ; vi. *0-8-0* ; vii. வேத வியாசர் அருளிச் செய்த மார்க்கண்டேய புராணத்தில் அடங்கியிருப்பது இத் தேவி மகாத்மியமாகும். இதில் ஒவ்வோரெழுத்தும் ஒவ்வொரு மந்திரம் என்று கூறுகின்றது ; இதில் மஹாதேவியானவள் பிறந்து கொடிய அசுரர்களை அழித்ததும் தேவர்களைக் காத்ததும், தேவர் தேவியைத் துதித்து வணங்கியதும், அவள் அவர்க்கு வரங் கொடுத்ததும் கூறப்பட்டுள. பண்டித. நா. இராமநாத சாத்திரியவர்களால் இது வட மொழியிலிருந்து, தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது ; viii. *311/1932/***IV**.

**Q25:417**

வைத்தியநாதஸ்வாமி ஸ்தபதி, பிரம்மஸ்ரீ., வெ.

**686.** i. ஸ்ரீகாளியம்மன் தோத்திரப் பாமாலை ; ii. ப. அருணாசல பத்தர், நீலப்பாடி ; நாகப்பட்டினம் ; எட்வர்ட் அச்சுக்கூடம், திருவாரூர் ; iii. *1933* ; iv. செ.மூ.எ. *3—19* ; v. *19 × 11* செ.மீ. ; vi. *0-1-0* ; vii. இந் நூலில், நாகப்பட்டினம் தாலுகாவில் நீலப்பாடி எனும் ஊரில் எழுந்தருளியுள்ள காளியம்மன் மீது பாடப் பெற்ற தோத்திரப் பாக்கள் அடங்கியுள்ளன. இதன் கண் வாழ்த்து விருத்தம், கும்மி, விநாயகர் துதி ஆகிய பாக்கள் நீங்கலாக காளியம்மன் மீது புனையப் பெற்ற *19* விருத்தப் பாக்களும் காணப்படுகின்றன ; viii. *1082/1933/***III**.

**Q25:417**

ஜகந்நாதையர். கி. வா.

**687.** i. காந்தமலை முருகன் தோத்திர மஞ்சரி ; ii. பி. என். பிரஸ், சென்னை ; iii. *1933* ; iv. செ.மூ.எ. *174+2* ; v. *19 × 13* செ.மீ. ; vi. *0-4-0* ; vii. இந் நூலில், கொங்கு நாட்டில் காவிரி வடகரையில் உள்ள

மோகனூரின்கண் விளங்கும் காந்தமலையில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் முருகப் பெருமான்மீது புனையப் பெற்ற 176 பாக்கள் அடங்கியுள்ளன. பெரும்பாலான பாடல்கள் கொச்சகக் கலிப்பாவிலும், சில கழி நெடிலடி ஆசிரிய விருத்தப் பாவிலும், பன்னிரண்டு பாக்கள் வண்ணக் குழிப்புச் சந்தப் பாவிலும் அமைந்தவை; viii. *1205/1933/III.*

Q24:417

*688.* i. ஸரஸ்வதி பூஜாகற்பம்; ii. ஸ்ரீ ராமவிலாச புஸ்தக சாலை, கும்பகோணம் ; ஜனார்த்தன பிரிண்டிங் ஒர்க்ஸ், லிமிடெட், கும்பகோணம் ; iii. *1935* ; iv. உ.ப. + செ.மூ.ப. *15* ; v. *12* × *9* செ.மீ. ; vi. *0-1-0* ; vii. இச்சிறு நூலில், முதற்கண் கணபதி தோத்திரமும், பின்னர் சரசுவதிமீது புனையப் பெற்ற மந்திரங்களும், சரஸ்வதி அஷ்டோத்திர நாமாவளியும் அடங்கியுள்ளன. வடமொழி மந்திரங்கள் தமிழ் எழுத்துக்களில் அச்சிடப் பெற்றுள்ளன ; viii. *29/1935/I.*

Q25:417

*689.* i. ஸ்யாமளா தண்டகம் ; ii. அ. இரங்கசாமி முதலியார் சன்ஸ், சென்னை ; பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. *1933* ; iv. செ.மூ.ப. *16* ; v. *12* × *8* செ.மீ. ; vi. *0-1-0* ; vii. பார்வதியின்மீது புனையப் பெற்ற பாமாலை இதன்கண் அடங்கியுள்ளது ; viii. *506/934//I.*

Q25:417

ஸ்வர்ணாம்பாள், வெ.

*690.* i. கந்தன் புகழ் ; ii. ; ஆண்டிஸெப்டி பிரஸ், சென்னை ; iii. *1932* ; iv. செ.மூ.ப. *51*-;-v. *13* × *11* செ. மீ ; vi. *0-2-0* ; vii. இது வேலன் வள்ளியை மணம்புரிந்த திருவிளையாடலைக் கூறுவது. பாடல்கள் பலவகை மெட்டுக்களில் அமைந்தவை. viii. *857/1933/I.*

Q26:417

*691.* i. கந்தன் புகழ் ; ii டவுன் பிரஸ், காஞ்சிபுரம்; iii ; 1934 ; iv . செ.மு. ப. V ; 14 × 11 செ. மீ ; vi. *0-2-0* ; vii. ; .... ; viii. *1010/1934/I.*

Q26:417

692. i. ஸ்ரீ **மஹாலக்ஷ்மி அஷ்டோத்தரசதநாம ஸ்தோத்திரம்** ; ii. டி. எம். ரகுநாதன் அண்டு பிரதர்ஸ், திருநீர் மலை ; பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. *1931* ; iv. உ.ப.†செ.மூ.ப. *31* ; v. *12 × 8* செ. மீ; vi. . . . . . . . . . . . ; vii. இது வடமொழிச் சுலோகங் களும் அவற்றின் தமிழ் விளக்கங்களும் அடங்கிய நூல். இது இலக்குமி தோத்திரங்களையுடையது. இத்துடன் ''லக்ஷ்மி அஷ்டோத்தர சதநாமாவளியும்'' உள்ளது. இறுதியில் லக்ஷ்மி யஷ்டகமும்' உள்ளது. viii. *631/1932/*II.

**Q25:417**

693. i. ஸ்ரீ **லலிதாம்பாள் சோபனம் தேவிபாடம்** *(11-ம் பதிப்பு)* ; ii. ஆர். எஸ். சுபலக்ஷ்மி அம்மாள், சென்னை ; மனோரமா பிரஸ், சென்னை ; iii. *1935* ; iv. செ.மூ.ப; *74* ; v. *21 × 13* செ. மீ ; vi. *0-5-0* ; vii. இந்நூலில் தேவியின் சில அவதாரங்கள் பாடல்கள் வாயிலாக விளக் கப்பட்டிருக்கின்றன. சிலவிடங்களில் திருமாலின் அவதாரங்களைத் தேவியின் அவதாரங்களாகக் கூறி யுள்ளார் ஆசிரியர். viii. *864/1935/*IV.

**Q25:417**

i. ஸ்ரீ **லலிதா ஸஹஸ்ர நாமாவளி** *(ஸ்ரீ லலிதாம்பிகை ஸஹஸ்ரநாமாவளி பார்க்க)* ; ii. . . . . . . . . . . . ; iii. . . . . . . . . . . . ; iv. செ.மூ.எ. *1,000* ; v. . . . . . . . . . . . ; vi. . . . . . . . . . . . ; vii. லலிதா தேவியின் மீது புனையப்பெற்ற *1000* நாமாவளிகள் காணப் படுகின்றன. viii. *1222/1935/*I.

**Q25:417**

## 942·551 சைவ புராணம்

**அப்பன், எ.**

694. i. **குமரக் கடவுள்** ; ii. பி. நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ், சென்னை அண்டு மதுரை ; விவேகானந்தா பிரஸ், மதுரை ; iii. *1932* ; iv. உ.ப. *60* ; v. *18 × 12* செ. மீ ; vi. *0-6-0* ; vii. இந்நூலில் தக்கன் அரசு

புரிதல் முதல் குமரக் கடவுள் பிறந்து, அரக்கர்களைக் கொன்று, வள்ளி, தெய்வயானையை மணத்தல் ஈருக, எளிய நடையில் சிறுவர்க்கென எழுதப்பட்டுள்ளது. viii. *749/1932/*IV.

Q*23:224*

சிவபாதசுந்தரம், சு,. யாழ்ப்பாணம் (தொ. து.)

*695.* **i.** கந்தபுராண **வி**ளக்கம் *(3-ம் பதிப்பு)* ; ii. புரோகிரசி அச்சுக்கூடம், சென்னை ; iii. *1935* ; iv. உ.ப.† செ.மூ.ப. *123* ; v. *18* × *12* செ. மீ ; vi. சதம் *45* ; vii. இந்நூல், கச்சியப்ப சுவாமிகள் இயற்றிய கந்தபுராணத்தின் சுருக்கமாகும். உரை நடையில் ஆக்கப்பட்டுள்ளது. இடையிடையே கந்த புராணச் செய்யுட்கள் இடம் பெற்றிருத்தல் சுவை பயக்கின்றது. viii. *1413/1935/*I.

Q*23:224*

சுப்பிரமணிய ஐயர் எம். எஸ்.

*696.* **i.** ஸ்ரீ அறுபத்து மூவர் அல்லது பூம்பாவை வைபவம் ; ii.கேசரி பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை ; iii. *1932* ; iv. உ.ப. *16* ; v. *18* × *12* செ. மீ; vi. *0-0-3* ; vii. இது சைவப் பிரசாரம், அறுபத்து மூவர் மகிமை, வருணம், தேவார திருவாசகம், சிவநேசர் சிறப்பு, பூம்பாவை மரித்தல், சம்பந்தர் விஜயம், எலும்பு பெண்ணுதல், சம்பந்தர் சரித்திரம், மணமும் வீடும் என்ற தலைப்புகளில் விளக்கங்கள் கொண்டது. viii. *11/1932/*II.

Q*23:224*

சுப்பிரமணியம், பி. எஸ்.

*697.* **i.** பாலஷண்முக விஜயம் ; ii. அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை ; நீட் அண் கோ பிரிண்டர்ஸ், சென்னை ; iii. *1932* ; iv. உ.ப. *127* ; v. *18* × *12* செ. மீ. , vi. *0-8-0* ; vii. இது முருகக் கடவுளின் தோற்றம்; திருவிளையாடல்கள் முதலியவற்றைக் கூறுகின்றது. பல படங்களுடன் கூடியது. viii. *961/1932/*III.

Q*23:224*

சுப்பிரமண்ய அய்யர் வி. ஆர். (மொ.து.)

698. i. ஸ்ரீ திரிபுரா ரகசியம் ஞான காண்டம் (2-ம் பதிப்பு) ; ii. ;.......... ஆனந்த போதினி அச்சாபீஸ், சென்னை ; iii. 1930 ; iv. உ.ப. 12+328 42;+v.18 × 12 செ. மீ ; vi. 1-8-0 ; vii. ஹாரிதாயரென்னும் முனிவரால் வடமொழியில் எழுதப் பெற்ற நூலின் மொழி பெயர்ப்பாகும். வீடு பேற்றிற்குரிய வழி வகைகளைக் கூறுகின்றது. viii. 252/1931/I.

Q23:224

699. i. சூரபன்மனின் வீரப்பரதாபம் ; ii. ஸ்கூல் மாஸ்டர்ஸ் பப்ளிஷிங் கம்பெனி, சென்னை ; பி.என். பிரஸ் சென்னை ; iii. 1932 ; iv. உ.ப. 124 ; v. 18 × 12 செ. மீ. ; vi. 0-8-0 ; vii. இந்நூல் கந்தபுராணத்தில், பெரும்பான்மை அசுர காண்டத்தையும் சிறுபான்மை மகேந்திர காண்டம், யுத்த காண்டம் ஆகிய இரண்டையும் தழுவி எழுதப்பட்டதாகும். சூரபன்மனுடைய அரசியற் பெருமை, தவச் சிறப்பு, போர்த்திறமை, மாயைகள் முதலியன விளக்கப்பட்டுள. viii. 712/1932/III.

Q23:224

பரஞ்சோதி முனிவர்

700. i. திருவிளையாடற் புராணம் ; ii. பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னப்பட்டணம் ; iii. 1931 ; iv. செ.மூ.உ.எ. 3363 ; v. 22 × 14 செ. மீ. ; vi. 3-0-0 ; vii. இதில் திருவிளையாடற் புராணமும் குறிப்புரையும் உள்ளன. ப. கணேச முதலியார் அவர்களும், அமிர்தம் சுந்தரநாதம் பிள்ளை அவர்களும் இக்குறிப்புரையை எழுதியுள்ளனர். இத்துடன் திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா, திருவாலவாய்த் தேவாரப் பதிகங்கள், மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி, திருவாலவாய்த் திருப்புகழ் முதலியனவும் அடங்கியுள. ஆசிரியர் வாழ்க்கை வரலாறும் முதலில் உள்ளது. v i 640/1932/II.

Q23: 4

701. திருவிளையாடற் புராணம் (சஞ்சிகை 1); ;ii. சாது அச்சுக்கூடம், சென்னை ; iii. 1935 ; iv செ.மூ.உ.ப. 48 ; v. 22 × 14 செ. மீ ; vi. 0-4-0 ; vii. திருவிளையாடற் புராணத்தைத் திங்கள் தோறும் பகுதிபகுதிகளாக வெளியிடும் இதழ். இதன்கண்

மதுரைக் காண்டத்தில் திருநாட்டுப் படலம் முடிய உள்ளது. ஈக்காடு இரத்தினவேல் முதலியார் அவர்கள் உரையும் விளக்கமும் எழுதி உள்ளார். viii. *1168/1935*/III.

**Q23:224**

**702.** i. திருவிளையாடற் புராணம் (சஞ்சிகை 2) ; ii.... ........ ; iii. *1935* ; iv. செ.மூ.உ.ப. *49—96* ; v. 22 × 14 செ. மீ ; vi .......... ; vii. திருநாட்டுப் படலம், திருநகரப் படலம் ஆகிய பகுதிகளுக்குப் பதவுரை பொழிப்புரை முதலியன உள்ளன. viii. *1169/1935*/III.

**Q23:224**

**703.** i. திருவிளையாடற் புராணம் (சஞ்சிகை 3) ; ii. சாது அச்சுக்கூடம், சென்னை ; iii. *1935*; iv. செ. மூ. உ. ப. *97—144*, v. 22×14 செ. மீ. ; vi. *0-4-0* ; vii. திருநகரப் படலம், திருக்கைலாயப் புகழ்ச்சி, புராண வரலாறு ஆகியவை உரையுடன் உள்ளன. viii. *416/1935*/IV.

**Q23:224**

**704.** i. திருவிளையாடற் புராணம் (சஞ்சிகை 4) ; ii. சாது அச்சுக்கூடம், சென்னை ; iii. *1935* ; iv. செ.மூ.உ.ப. *145—192* ; v. 22 × 14 செ. மீ ; vi. *0-4-0* ; vii. தீர்த்த விசேடம் முதல் இந்திரன் பழி தீர்த்த படலம் முடிய உரையுடன் உள்ளன. viii. *417 1935*/IV.

**Q23:224**

**705.** i. திருவிளையாடற் புராணம் (சஞ்சிகை 5) ; ii. சாது அச்சுக்கூடம், சென்னை ; iii. *1935* ; iv. செ.மூ.உ.ப. *193—240* ; v. 22 × 14 செ. மீ ; vi. *0-4-0* ; vii. இந்திரன் பழி தீர்த்த படலம், வெள்ளானை சாபந் தீர்த்த படலம், திருநகரங்கண்ட படலம், ஆகியவை உரையுடன் உள்ளன. viii. *1368/1935*/IV.

**Q23:224**

**706.** i. திருவிளையாடற் புராணம் (சஞ்சிகை 6) ; ii. சாது அச்சுக்கூடம், சென்னை ; iii *1935* vi செ. மூ. உ. ப. *241-288* ; v. 22 × 4 செ. மீ

**0-4-0** ; vii. திருநகரங்கண்ட படலம், தடாதகைப் பிராட்டியார் திருவவதாரப் படலம் ஆகியவை உரையுடன் உள்ளன. viii. *1369/1935*/IV.

Q*23:224*

சோமதேவ சர்மா, வே. ஸ்ரீவத்ஸ

*707.* i. மார்கண்டேய புராணம் ; ii. சாந்தாச்ரமம், சென்னை; கேம்பிரிட்ஜ் பிரஸ், சென்னை அண்டு ; கார்லண்டு கம்பெனி ; iii. *1932* ; iv. உ.ப. *128* ; v. *18* × *12* செ. மீ ; vi. *0-6-0* ; vii. மார்க்கண்டேயர் க்ரௌஷ்டி எனும் மாணக்கனுக்குக் கூறியது. ஆதலின் இந்நூல் இப்பெயர் பெற்றது. இதன்கண் தேவிமகாத்மியமும், சூரியகுல வாசகர்களது வரலாறும், சிராத்த தருமமும், பெண்கள் தருமமும் பிறவும் எளிய நடையில் விளக்கப்பட்டிருக்கின்றன. மார்க்கண்டேயர் வரலாறு இதில் சிறிதும் கூறப்படவில்லை. viii. *529/1932*/III.

Q*23: 224*

**294-554 வைணவதோத்திரம்**

அண்ணங்கராசாரியார்

*708*. i. பகவத் கதையமுதம் ; எம். ஆர். கோவிந்தசாமி நாயுடு, சென்னை ; ii. மாடல் அச்சுக்கூடம், சென்னை ; iii. *1930* ; iv. உ.ப. *102* ; v. *24* ×*10* செ.மீ. vi. .......... ; vii. நாலாயிரத் திவ்விய பிரபந்தங்களில் ஆழ்வார்கள் சூட்டிச் சென்ற இறைவனது அவதாரச் சிறப்புகளையும் வேறு பல கதைகளையும் தொகுத்துத் தரும் நூல். மேலும் இராமாவதாரம், கிருஷ்ணாவதாரம், முதலியனவும் தரப்பட்டுள்ளன. viii. *1003/1933*/II.

Q*22:224*

*709*. i. வாதி பீகர விஜயம் படியடைக்க முடியொடுக்கம் (முதற் பகுதி—அவதாரிகை) ; ii. ; ஆர். ஜி. அச்சுக்கூடம், சென்னை ; iii. *1934* ; iv. உ.ப. *24—44* ; v. *22* ×*14* செ.மீ. ; vi. *0—4—0* ; vii. இது ஒரு மறுப்புக்கு மறுப்பு நூலாகும். வைணவர்க்குப் பெரிதும் பயன்படும் நூல். viii. **266/1934/IV.**

Q*22:224*

ண்ணுத்துரை கனபாடிகள்

710. i. க்ருஷ்ணுஷ்டோத்திர பாத நாம ஸ்தோத்ரம்; ii. ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், சென்னை; சோல்டன் அண்டு கம்பெனி, சென்னை; iii. 1935: iv. செ.மூ.ப. 8; v. 18 × 12 செ.மீ.; vi..........; vii. இதன்கண் கிருஷ்ணுஷ்டோத்திர சதநாம தோத்திரமும், கிருஷ்ணுஷ்டகமும் ஆதித்ய இருதய தோத்திரமும் அடங்கியுள்ளன. வடமொழித் தோத்திரங்கள் தமிழ் எழுத்துக்களில் தரப்பட்டுள்ளன. viii. 1582/1935/I.

Q22:417

அப்பய்ய திட்சதர், பிரம்மஸ்ரீ

711. i. மார்க்க பந்து ஸ்தோத்ரம்; ii. ஆர்யமத ஸம்வர்த்தனி பிரஸ், சென்னை; iii. 1934; iv. செ.மூ.உ.எ. 5; v. 14 × 11 செ.மீ.; vi. 0–1–0; vii. அப்பய்ய தீட்சதர் அவர்களுக்குப், பிற மதத்தார்களால் ஊறு விளைந்தபோது அவர், பரமசிவன் பேரில் ஐந்து சுலோகங்கள் கூற, இறைவன் வழித்துணையாக வந்து காப்பாற்றினுன். அச்சுலோகங்களைச் சேங்காலிபுரம் அனந்தராம தீட்சதர், வடமொழி கிரந்தம், தமிழ் ஆகிய எழுத்துக்களில் அச்சிட்டு அவற்றிற்குத் தமிழில் பொழிப்புரையும் வரைந்துள்ளார். viii. 834/1935/I.

Q22:417

அம்பேதாஸ் நரசிங்கராவ்

712. i. ஸ்ரீவீர ஆஞ்சனேயர் ஸ்தோத்ரம், ஸ்ரீஅனுமான் நாமாம்ருதம்; ...; ii. விக்டோரியா ஜூப்லி அச்சுக்கூடம், சித்தூர்; iii. 1934; iv. செ.மூ.எ. 32; v. 18 × 12 செ.மீ., vi. 0–0–6; vii. இந்நூலில் சோளங்கிபுரம் எனும் மலையிலுள்ள அனுமார் மீது புனையப்பெற்ற 32 விருத்தப் பாக்கள் அடங்கியுள்ளன. நூலின் முகப்பில் 'இராமர் துதிப்பாடல்' ஒன்றும் அடங்கியுள்ளது. viii. 1075/1934/II.

Q22:417

அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர்

713. i. ஆசார்ய ஹ்ருதயம்; ii. எஸ். வி. ஸ்வாமி அலண் சன்ஸ், ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய க்ரந்த நிலையம்

சென்னை ஆதிமூலம் பிரஸ், சென்னை ; iii. *1933* ; iv. உ.ப. *40* ; v. *18 ×12* செ.மீ. ; vi. *0–3–0* ; vii. இந் நூல் மணிப் பிரவாள நடையில் எழுதப் பெற்றுள்ளது. இதன்கண் நிலையாமையையும், இறைவன் பெருமைகளையும், ஆச்சாரியரின் உள்ள நிலைமை யையும் விளக்கியுள்ளார் ஆசிரியர். viii. *717/1934/*II.

Q22:417

**சுப்பலக்ஷ்மி அம்மாள், அனந்தங்காடு**

*714.* i. ஆர். எஸ். ஹிந்தி பிரசார் பிரஸ், சென்னை ; iii. *1928* ; iv. செ.மூ.எ. *465* ; v. *21 ×14* செ.மீ. ; vi. *0–2–6* ; vii. திருவனந்தபுரத்தில் உள்ள திருமால் மீது புனையப்பெற்ற தோத்திரப் பாடல்களைக் கொண்டது இந் நூல். இதன்கண் பல்வேறு இராகங்களில் அமைந்த பாக்கள் அடங்கியுள. viii. *253/1933/*III.

Q22:417

இராமகிருஷ்ணனந்தம், சுவாமி

*715.* i. ஸ்தோத்திர பஞ்சகம் ; ii. அமெரிக்கன் டைமன்ட் பிரஸ், சென்னை ; iii. *1934* ; iv. செ.மூ.எ. *5* ; v. *13 ×11* செ.மீ. ; vi........... ; vii. வீசூர் சுவாமி வேலைய தேசிகர் மீது புனையப்பெற்ற பதினுன்கு சீர் ஆசிரிய விருத்தப் பாக்கள் இதன்கண் உள. viii. *420/1934/*IV.

Q23:417

இராமஸ்வாமி ஐயங்கார், கி, அரியமங்கலம்

*716.* i. ஸ்ரீமத் இராமாயண உதயம் ; **ii.** ஸ்வாமி அச்சுக்கூடம், திருச்சி ; iii. *1931* ; **iv.** உ.ப. *10* ; v. *13 ×11* செ.மீ. ; vi. ***0–1–0*** ; vii. இந் நூலில் இராமனின் அருமை பெருமைகளை அறியாமல் பேசும் நாத்திகர்களை ஆசிரியர் தக்க காரணங்களைக் காட்டி மறுக்கிறார். viii. *588/1931/*IV.

Q22:224

எதிராஜலு பாகவதர் டி. கே. சென்னை

717. i. ஸ்ரீ கிருஷ்ண லீலா என்னும் கோபால லீலா, ii. அ. முத்துவடிவேல் முதலியார், சென்னை; பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. 1932; iv. உ.ப. + செ. மூ. ப. 32; v. 21 × 13 செ.மீ.; vi. 0–4–0; vii. இது கண்ணனின் விளையாடல்களைக் கூறுவது. உரைநடையும், பாட்டுமாக அமைந்தது. viii. 1469/1933/I.

Q22:224

கலியுக தாஸானு தாஸன்

718. i. கலியுக பாகவதம்-(முதல் பாகம்); ii. ஸ்ரீனிவாச அய்யங்கார், காவனூர்; மனோரஞ்சினி பிரஸ், சென்னை; iii. 1931; iv. செ.மூ.ப. 44; v. 21 × 14 செ.மீ.; vi............., v. ஏழுமலையான், தம்முள்ளத்தில் எழுந்தருளி இப்பாடல்களைப் பாடியதாக இதன் ஆசிரியர் கூறுகிறார். viii. 440/1931/I.

Q22:417

கஸ்தூரி ரங்கஐயர், ஆ. வி., சென்னை

719. i. ஸ்ரீமத் பாகவத வினாவிடை; ii. வி. ராமஸ்வாமி சாஸ்த்ருலு அண்ட் ஸன்ஸ், சென்னை; வாவில்லா பிரஸ், சென்னை; iii. 1931; iv. உ.ப. 12+552+16; v. 18 × 12 செ.மீ.; vi. ..............; vii. இதில் பாகவதம் வினாவிடையாக எழுதப்பட்டுள்ளது. பன்னிரண்டு ஸ்கந்தங்களடங்கியது. படங்களுடன் கூடியது. viii. 257/1932/II.

Q22:224

720. i. ஸ்ரீமத்ராமாயண வினாவிடை; வி. ராமஸ்வாமி சாஸ்த்ருலு அண்ட் சன்ஸ், சென்னை; வாவில்லா பிரஸ், சென்னை; iii. 1932; iv. உ.ப. 378; v. 18 × 12 செ.மீ.; vi............; vii. இதில் இராமாயணக் கதை வினா-விடையாக எழுதப்பட்டுள்ளது சித்திரப் படங்களுடன் கூடியது. viii. 256/1932/II.

Q22:224

சங்கராச்சாரியார்

**721.** i. பஜகோவிந்தம் உரையுடன் (முதற் பதிப்பு); ii. அ. முத்துவடிவேல் முதலியார், பூமகள் விலாச அச்சுக் கூடம், சென்னை; iii. *1933*; iv. செ.மூ.உ.ப. *32*; v. *12* ×*8* செ.மீ.; vi. *0–2–0*; vii. இந் நூலில் சங்கராச்சாரியார் அருளிய பஜகோவிந்தம் எனும் அறிவுரைத் தொகுதியும், அதற்குத் தமிழில் உரை விளக்கமும் அடங்கியுள்ளன. viii. *511/1934/*I.

Q22:417

**722.** i. பஜகோவிந்தம கோபிகா கீதை (2-ம பதிப்பு) ii. ஜெனரல் டிரேடிங் கம்பெனி, சென்னை; கபீர் பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. *1931*; iv. செ.மூ.எ. *29* +*21*; v. *12* ×*9* செ.மீ.; vi; *0–1–0* vii. இந் நூலில் பஜகோவிந்த சுலோகமும் கோபிகா கீதையும், வடமொழியில் உள்ளபடியே தமிழ் எழுத்துக்களில் வெளியிடப்பட்டுள்ளன. viii. *513/1931/*IV.

Q22:417

**723.** i. பஜகோவிந்தம் கோபிகா கீதை (3-ம் பதிப்பு); ii. ஜெனரல் டிரேடிங் கம்பெனி, மதரூஸ்; ஹிந்தி பிரசார் பிரஸ், சென்னை; iii. *1934*; iv செ.மூ.ப. *11*; v. *12* ×*9* செ.மீ.; vi. *0–1–0*; vii. ........; viii. *910/1934/*IV.

Q22:417

சீனிவாச பட்டாச்சாரியா

**724.** i. ஸ்ரீ கிருஷ்ண பூஜை; ii. பூமகள் விலாச அச்சுக்கூடம் சென்னை; iii. *1933*; iv. உ.ப. + செ.மூ.ப. 16; v. *12* ×*8* செ.மீ.; vi. *0–1–0*; vii. இச்சிறு நூலில் கிருஷ்ண நாமாவளியும் விருத்தப்பாடல்களும் அடங்கியுள்ளன. viii. *508/1934/*I.

Q22 :417

சுப்ரமணியஞ் செட்டியார், ஆர்.ரு.

**725.** i. திருப்பதி ஸ்ரீ வெங்கடேஸ்வர தோத்திரமாலை; ii. மாரிச்செட்டி ருத்திரைய்ய நாயுடு, சித்தூர்; ஸ்ரீ பத். மாவதி அச்சுக்கூடம், திருப்பதி; iii. *1933*; iv.

செ மூ.ப. 8 ; v. 22 × 14 செ.மீ. ; vi. *0–1–0* ; vii. இந்நூலில் திருப்பதி ஏழுமலையான் மீது புனையப் பெற்ற தோத்திரப் பாக்கள் 30-ம், அடிதோறும் 'ஸ்ரீ கோவிந்த' என்று முடிவுறும் அற்புதச் சிந்தும், கும்மியும் அடங்கியுள்ளன. viii. *101/1934/*I.

**Q22.417**

சேஷாசல தாசர், நா., கடலூர்

*726.* i. *ஸ்ரீராமர் பஞ்ச ரத்தினம்* ; ii. ஷண்முகா அச்சியந்திரசாலை, திருப்பாதிரிப்புலியூர் ; iii. *1935* ; iv. உ.ப.+செ.மூ.ப. *20* ; v *18 × 12* செ. மீ. ; vi. *0—1—6* ; vii. இந் நூலில் ராமத் தியானமும், கோவிந்த ராமாம்ருத தோத்திரமும், நாம நாமத் திருப்பதிகமும், தோத்திர அபயமும் ஆகிய 5 பகுதிகள் அடங்கியுள்ளன. திருமலை யேறுங்கால் கோவிந்த நாமாம்ருத தோத்திரம் கூறிக் கொண்டே ஏறின் நலம் மிகப் பயக்கும் என இந்நூலாசிரியர் முன்னுரையில் கூறுகின்றார். viii. *175/1935/*IV.

**Q22:417**

சோமசுந்தர தேசிகர் (மொ.து)

*727.* i. *திபேத்திய இராமாயணம்* ; ii. சாது அச்சுக்கூடம், சென்னை ; iii. *1933* ; iv. உ.ப.7; v. *25 × 17* ; செ.மீ. ; vi. . . . . . . . . . . . . . . ; vii. துருக்கிஸ் தானம் என்ற நாட்டில் நிலத்தை வெட்டிப் பரிசோதனை செய்தபோது கிடைத்த 3 சுருள்களில் கிடைத்தது இது. *439* வரிகளையுடையது. அச்சுருள் இப்போது இலண்டனில் உள்ள நூல் நிலையத்தில் பாதுகாத்து வைக்கப் பட்டுள்ளது. இந்த இராமாயணக் கதை பொதுவாக நம் நாட்டுக் கதையோடு ஒற்றுமையுடையதானாலும், பல மாறுதல்கள் உடையதாய்க் காணப்படுகிறது. அதனை ஆராய்ந்த எப். டபிள்யூ துரைமகனார் அமெரிக்கப் பத்திரிகையில் வெளியிட்ட நூல் இதில் தமிழாக்கப்பட்டுள்ளது. viii. *235/1933/*II.

**Q22:417**

**டாகூர், பக்தி விநோத**

**728.** i. சரணாகதி ; ii. கௌடியாமடம், சென்னை ; வாவில்லா பிரஸ், சென்னை-21 ; iii. *1931* ; iv. செ.மூ.ப. *121* ; v. *14×11* செ.மீ. ; vi. ............ ; vii. இது கண்ணனின் பெருமைகளைக் கூறி, தன்னையே அவனுக்கு அடைக்கலப் பொருளாகத் தந்து, அவன் அருள் வேண்டிப் புனையப்பெற்ற பாடல்களைக் கொண்ட நூலாகும். முதலில் வங்காள மொழியில் இயற்றி, ஆங்கிலம், குஜராத்தி, ஒரியா, தமிழ் முதலியவற்றில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டுள்ளது. இந் நூலுக்குப் பக்தி சித்தானந்த சரஸ்வதி சுவாமிகள் முன்னுரை வரைந்துள்ளார். viii. *406/1931*/III.

Q22:417

**729.** i. தனியன்கள் ; ii. ஸ்ரீ கோபால விலாஸ் பிரஸ், கும்பகோணம் iii. *1933* ; iv. செ. மூ.ப. *8* ; v. *14 × 11* செ. மீ. ; vi. ............ ; vii. இந் நூலில் இறைவனது பெருமைகளை விளக்கும் வகையில், வடமொழியில் எழுதப் பெற்ற சுலோகங்கள் தமிழ் எழுத்துக்களில் அச்சிடப்பெற்றுள்ளன. viii. *1500/1933*/IV.

Q22:417

**திருமலை அய்யங்கார் (கிடாம்பி), மதுரை**

**730.** i. கும்பகோண பிசாசோச்சாட நமந்தர மஹோததி, (முதல் தரங்கம்) ; ii...... ; ஹரி ஸமய திவாகரம் பிரஸ், மதுரை ; iii. *1932* ; iv. உ.ப. *40* ; v. *21×13* செ.மீ. ; vi. *0—6—0* ; vii திருக்குடந்தையார் அவர்கள் வெளியிட்ட 'பிறர் நூல் பொருள் கொள்ளல்'. 'இரு பண்டிதர்களின் சம்பாஷணை' என்ற நூல்களுக்கு மறுப்புத் தெரிவிக்கும் வகையிலும் அண்ணங்கராச்சாரியார் அவர்களின் பெருமைகளைப் பரப்பும் வகையிலும் இந்நூல் வெளியிடப்பட்டதாகும். viii. *129/1932*/IV.

Q22:417

**நாராயணன், மதுரை**

**731.** i. அண்ணங்கராசார் சுவாமியின் மாற்று உருவம், நெம்பர்-2 வெளியீடு, ii. வெங்கடேஸ்வர் பிரஸ், மதுரை ; iii. *1934* ; iv. உ.ப. *24* ; v. *22×14* செ.மீ. ; vi ........ ; vii. இந் நூல் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியர் அவர்களது கருத்துக்களுக்கு மறுப்புகள் கூறும் வகையில் வெளியிடப் பெற்றுள்ளது. viii. *942/1934*/I.

Q22:417

நிகமாந்த மகாதேசிகன்

732. i. அதிகார ஸங்கிரஹப் பாட்டுகளின் உரை ; ii. ஸ்ரீ கோமளாம்பா பிரஸ், கும்பகோணம் ; iii. 1934 ; v. செ.மூ.உ.ப. 124 ; v. 21 × 14 செ.மீ.; vi. 0—8—0 ; vii. நிகமாந்த மகா தேசிகர் அருளிச் செய்த ஸ்ரீ ரஹஸ்யதிரயரத்தில் இருக்கும் அதிகாரச் சங்கிரகப் பாட்டுகளுக்கு எளிய தமிழ் நடையில் பதவுரையும் விருத்தியுரையும் இந் நூலில் எழுதப்பட்டிருக்கின்றன. மேலும், வட மொழிச் சொற்கள் கலக்காமல் தூய தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளது. பாடல்களின் கருத்துக்களும் சுருக்கித் தரப்பட்டுள்ளன. இதன்கண் 56 பாடல்கள் அடங்கியுள்ளன. viii. 686/1934/II.

Q22:417

பதுமநாப பிள்ளை, வ., ஆரியர்

733. i. ஆநிரை பின் சென்ற அச்சுதன் ; ii. சாது அச்சுக் கூடம், சென்னை ; ii. 1933 ; iv. உ.ப. 5 ; v. 24 × 16 செ.மீ. ; vi. ........ ; vii காதலி தடுத்தும் நிற்காமல், கண்ணபிரான் ஆநிரை பின் சென்ற காரணத்தை இது விளக்குகிறது. காதலி கண்ணனைப் போக வேண்டாம் என்பதற்கான காரணங்களைக் கூறும் முறையும், கண்ணன் போகவேண்டும் என்பதற்குரிய காரணங்களைக் கூறும் முறையும் படித்தின்புறத் தக்கனவாகும். viii. 864/1933/I.

Q22:417

734. i. ஐம்பெரும் பாதகர்கள் ; ii சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை ; iii. 1933 ; iv. உ.ப. 7; v. 24 × 16 செ.மீ. ; vi. ........... ; vii. இந் நூலில் குறிப்பிடப்பட்டுள்ள ஐம்பெரும் பாதகர்கள், குயில், மயில், கருவிளை, களங்கனி, நறுமலர் ஆகியவை. தலைவனின் பிரிவாற்றுமையால் வருந்தும் தலைவி மேற்குறிப்பிடப்பட்ட பொருள்களின் நிறத்தால் கண்ணனின் நிறம் நினைவு வரப்பெற்று, பிரிவுத் துன்பம் ஆற்றாது அவற்றைப் பாதகர்கள் என அழைத்துப் புலம்புவதாக அமைந்த ஆண்டாள் பாடலின் விளக்கமாகும் இது. viii. 705/1933/IV.

Q22:417

பராசரபட்டர்

735. i. ஸ்ரீ ரங்கநாத ஸ்தோத்ரம் ; ஸ்ரீநிவாஸ விலாஸ் புஸ்தக சாலை, கும்பகோணம் ; ii. ஸ்ரீ கோமளாம்பா அச்சுக் கூடம், கும்பகோணம் ; iii. 1934 ; iv. செ.மூ.உ.ப.

8 ; v. 18 × 12 செ.மீ. ; vi. 0—2—0 ; vii. திருவரங்க அரங்கநாதன் மீது பாடப்பெற்ற 8 சுலோகங்கள் இதன்கண் காணப்படுகின்றன. எட்டு சுலோகங்களும், வடமொழி கிரந்தம், தமிழ் ஆகிய எழுத்துக்களில் உள. பதவுரையும் கருத்துரையும் தரப்பெற்றுள்ளன. viii. 22/1934/ I I.

Q22:417

**பீமகவிராயர்**

736. i. ஸ்ரீ ராமர் அஸ்வமேத யாகம் ; ii. அ. இரங்கசாமி முதலியார் சன்ஸ், சென்னை ; பூமகள் விலாச அச்சுக்கூடம் சென்னை ; iii. 1933 ; iv. உ.ப. 543 ; v. 24 × 16 செ.மீ. ; vi. 2—8—0 ; vii. இந் நூலில் கம்பரால் இயற்றப்பட்ட இராமாயணத்தின் ஏழு காண்டங்களின் வசனச் சுருக்கமும், பீமராயர் இயற்றிய அசுவமேதயாகமும், கோவிந்த பிள்ளை அவர்களால் எழுதப்பட்ட வசனமும் படங்களுடன் வெளியிடப் பெற்றுள்ளன.

Q22. 17

737. i. புருஷஸூக்தம் ; ii. பட்டாபிராமன் கம்பெனி, சென்னை ; பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1933 ; iv. உ.ப. + செ.மூ.ப. 24 ; v. 12 × 9 செ.மீ. ; vi. 0—2—0 ; vii. இச்சிறு நூலில் நாராயண ஸூக்தம், ஸ்ரீ ஸூக்தம், பூஸூக்தம், நீளாஸூக்தம், மந்தர் புஷ்பம் ஆகிய வடமொழிப் பதிகங்கள், தமிழ் எழுத்துக்களில் அச்சிடப் பெற்றுள்ளன. viii. 512 1934/ I.

Q22:417

**பெருமாள் செட்டியார், அ.**

738. i. ஸ்ரீராமர் லக்ஷிமி ஸ்தோத்திரம் ; ii. . . . . ; முருக விலாஸ் ஜனனுகூல பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1935 ; iv. செ. மூ.ப. 20 ; v. 18 × 12 செ.மீ. : vi. 0—2—0 ; vii. இந் நூலில் இராமர் மீதும் இலக்குமி மீதும் புனையப் பெற்ற தோத்திரப் பாக்கள் அடங்கியுள்ளன. பிற்பகுதியில் திருவரங்கத்தின் பெருமைகளும் விளக்கப்பட்டுள. viii. 680/1935/ I.

Q22:417

**போத்தி நாயுடு, செங்கல்படை.**

739. i. ஆயிர நாமமென்னும் வைகுண்ட வாசகம், ii. இ. ராமகுருசாமிக் கோனர், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் பிரஸ், மதுரை ; iii. 1931 ; iv. உ.ப. + செ.மூ. ப. 31 ; v. 21 × 13 செ.மீ. ; vi. 0—4—0 ; vii. ஆயிரநாமமென்னும் வைகுண்ட வாசகமும் நூற்றெட்டுத்

திருப்பதியும், அந்தந்த தலத்திலுள்ள பெருமாள் பெயரும், ஆண்டாள் நாமங்களும் அடங்கியுள. viii. *981/1931/* IV.

**Q22:417**

மலைக்கொழுந்து முதலியார், திருக்கழுக்குன்றம்

**740.** i. ஸ்ரீமத் ராமாயண ஓரடி ; ii. மா. நடேச நாயகர், ஆதிமூலம் பிரஸ், சென்னை ; iii. *1933* ; iv செ.மூ.ப. *16* ; v. *16 × 12* செ.மீ. ; vi. *0-1-0* ; vii. இச்சிறு நூலில் இராமபிரானது வரலாறு, செய்யுளில் தரப்பட்டுள்ளது. இராமாயணத் தத்துவமும் கூறப்பட்டுள்ளது ; viii. *827/1933/* II.

**Q22:417**

முத்துராம ரெட்டியார், வெ., விளாங்குட்டையூர்

**741.** i. ஸ்ரீ ரங்கநாதர் பக்திரஸப் பாமாலை ; ii. மு. ஸ்ரீ.ரங்கசாமி ரெட்டியார், விளாங்குட்டையூர் ; ஆனந்தா பிரஸ், ஈரோடு ; iii. *1934* ; iv. செ.மூ.ப. *12* ; v. *21 × 14* செ.மீ. ; vi. *0-1-0* ; vii. அரங்கநாதர் மீது புனையப்பெற்ற பாடல்கள் இந் நூலில் காணப்படுகின்றன. சிந்து, தேவாரப் பண் முதலிய இராகங்களின் துணைகொண்டு இயற்றப்பட்ட பாடல்கள் இதன்கண் மிகுதியாக உள்ளன. viii. *1314/1934/* II.

**Q22:417**

முன்னுசிங்தாஸ், & டி. எஸ். நரசிம்மதாஸ்

**742.** i. திருவேங்கட ஸ்தோத்திரம் ; i. பி. ரங்கநாயகுலு, திருப்பதி ; கோல்டன் பவர் பிரஸ், திருப்பதி ; iii. *1933*; iv. செ.மூ.ப. *8* ; v. *23 × 14* செ.மீ. ; vi. *0-1-0* ; vii. திருவேங்கடநாதன் மீது புனையப்பெற்ற தோத்திரங்கள் இந் நூலிலுள. வேங்கடேஸ்வர ஞானநந்த தோத்திரப் பாக்கள் பத்தும் இத்துடன் இணைக்கப்பெற்றுள்ளன. viii *59/1933/* IV.

**Q22:417**

ராமஸ்வாமி அய்யங்கார், தி. சென்னை

**743.** i. தேசிக வரதன்; ii. கபீர் அச்சுக்கூடம், சென்னை ; iii. *1932*; iv. உ.ப. *56*; v. *18 × 12* செ.மீ.; vi. ......; vii. இது, வேதாந்த தேசிகர், நம்மாழ்வார் முதலிய வைணவப் பெரியாரின் பாடல்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட வைணவ

சித்தாந்த விளக்கக் கட்டுரையாகும். இதில், காகாசுர சரணாகதி, பக்தி, அருள் முதலிய பொருள்களும் விளக்கப் பட்டுள. viii. 789/1932/II.

Q22:224

ராமாநுஜாசாரியார், சோழவரம்

744. i. படியடக்கம்; ii. ......; ஸ்ரீகோமளாம்பா பிரஸ், கும்பகோணம்; iii. 1934; iv. உ.ப. 53; v. 21×13; vi. 0–4–0; vii. இந்நூலில் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா அவர்கள் தேசிகனைப் பற்றிக் கூறிய கூற்றுக்கு மறுப்பு தெரிவிக்கும் செய்திகள் அடங்கியுள்ளன. viii. 1205/1934/III.

Q22:224

745. i. வித்வநமதோரஞ்நம்; ii. ......; ஸ்ரீ கோமளாம்பா பிரஸ், கும்பகோணம்; iii. 1934; iv. உ.ப. 16; v. 21×13 செ.மீ; vi. 0–2–0; vii. இந்நூலில் அண்ணாவின் கால நிர்ணயம், அண்ணாவுக்கும், பிள்ளை லோகாசார்யருக்கும் உள்ள தொடர்பு என்பன போன்ற செய்திகள் ஆராயப்பட்டுள்ளன. viii. ११८ 1934/I.

Q22:417

விலக்ஷநானந்தர், தேவார நகரம்

746. i. ஸ்ரீ ராமச்சந்திர தெய்வம்—100; ii. இரத்தின சபாபதி, பரிமள கம்பெனி, பரிமள புக் ஷாப், சென்னை; பாரதி பிரஸ், சென்னை; iii. 1933; iv. செ.மூ.எ. 100; v. 19×13 செ.மீ; vi. 0–0–9; vi. இந்நூலில் இராமபிரான் மீது புனையப்பட்ட நாமாவளிப் பாடல் அடங்கியுள்ளது. 100 கண்ணிகள் கொண்டது. இராமாயணம் முழுவதும் இப்பாடலுக்குள் அடங்கியுள்ளது. viii. 1042/1933/IV.

Q22:417

வெங்கடேஸ்வர கர்த்தா, டி.ஆர்.

747. i. ஸ்ரீமத் நாராயண மந்தரமெனும் ஸ்ரீ ரெங்க விலாஸ் கானம்—(இரண்டாம் பாகம்); ii. ரா. ஆதிமூல அண்ணாவி; பனைபடிப்பட்டி; ஸ்ரீ ராமாநுஜம் பிரஸ், தென்காசி; iii. 1933; iv. செ.மூ.ப. 43; v. 16×13 செ.மீ; vi. 0–8–0; vii. பக்திச் சுவை ததும்பிய பல்வேறு இராகங்களிலும், சந்தங்களிலும் அமைந்த பலவகையான கீர்த்தனைகள் இந்நூலில் அடங்கியுள்ளன. viii. 611/1933/II.

Q22 : 417

வைத்தியலிங்கம் பிள்ளை, கே.

748. i. பாகவதச் சுருக்கம்; ii. பி. நா. சிதம்பர முதலியார் பிரதர், மதுரை; விவேகானந்தா பிரஸ், மதுரை; iii. *1932;* iv. உ.ப. *63;* v. *18×12* செ.மீ; vi. *0–5–0;* vii. இதில் பாகவதத்தின் சுருக்கம் உளது. முன் வரலாறு, கண்ணபிரான் கதை, கோகுலத்தில் வளர்தல், பூதகி கொலை, சக்டாசூரன், பகாசூரன் முதலியோர் கொலை, குழந்தை விளையாட்டு, உக்கிரசேனனுக்கு முடி சூட்டல், சராசந்தன் சண்டை, துவாரகை உண்டு பண்ணல், உருக்மணி, சம்பாவதி, சத்தியபாமை, காளிந்தி சத்தியை, சுபத்திரை முதலியோர் திருமணம் ஆகியவை உள்ளன. viii. *127/1933/*I.

Q22:417

749. i. ஸத நாமாவளி ஸ்தோத்திரம், ii பூமகள் பதிப்பு, சென்னை, பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை, iii. *1933:* iv செ. மூ. ப. *113 ;* v. *12 × 8* செ. மீ: vi. *0-1-0:* vii இச்சிறு நூலில் திருமாலின் *108* பெயர்களே ஸ்தோத்திரமாக அமைந்துள்ளன. viii. *509/1934/*I

Q22:417

## 294·554 வைணவ புராணங்கள்

ஸோமதேவசர்மா, வே. ஸ்ரீவத்ஷ (மொது)

750. i. ஸ்ரீ கூர்ம புராணம்; ii. ஸ்ரீ அமரகலா விலாஸினி ஸபை, சென்னை; காட்லாண்ட் அண்டு கம்பெனி, சென்னை; iii. *1934;* iv. உ.ப. *92;* v. *18×12* செ.மீ; vi. *0–6–0;* vii. வைகுண்ட நாதன் கூர்மாவதாரம் செய்தபோது இந்தரத்யும்நன் என்ற பக்தனுக்கு உபதேசம் செய்விப்பதால், இந்நூலிற்குக் கூர்ம புராணம் எனப் பெயர் வந்தது. வடமொழியில் *5216* சுலோகங்களால் செய்யப்பட்ட புராணம், ஸ்ரீவத்ஸ. வெ. ஸோமதேவ சர்மா அவர்களால் உரைநடையில் சுருக்கப்பட்டது. viii. *1383/1934/*II.

Q22 : 224

751. i. ஸ்ரீ ப்ரஹ்ம புராணம்; ii. அமரகலா விலாஸினீ ஸபை, சென்னை; அபிராமி பிரஸ்; iii. *1935;* iv. உ.ப. *188;* v. *18×12* செ.மீ; vi. *0–12–0;* vii. இந்நூல் பதினெண் புராணங்களுள் ஒன்றான பிரம்ம புராணமாகும். பிரம்மா முனிவர்களுக்குக் கூறிய செய்திகள் இதில் அடங்கியுள்ளதால், இப்பெயர் பெற்றதெனவும், மும்மூர்த்திகளில் ஒருவரான பிரம்மாவின் பெருமையைக் கூறுவதால் இப் பெயர் பெற்றதெனவும் கூறுவர். இதன்கண் பல்வேறு பெயர்களால் வழிபடப் பெறும் இறைவன் ஒருவனே என்ற கருத்து அமைந்துள்ளது. viii. *888/1935/*II.

Q22 : 224

